ஓம் பரப்பிரம்மணே நம: **64-பக்கங்கள்**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) 

| | | |
|---|---|---|
| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸஹு புரட்டாசிமீ 1உ | இதழ்-78. |
| Vol. 7. | 1932-ம்ஹு செப்டம்பர்மீ 16உ | No 78. |




" ஆதியைத் தொழு " எல்லாவற்றுக்கும் முதற்காரணமாயிருக்கும் பரப்பிரம்மத்தைத் தியானம்செய் என்பது பெரியோர்களின் வாக்கியம். காரணம் இல்லாமல் காரியம் உண்டாகாது. வெளிச்சம் தோன்றுவதற்கு சூரியன் காரணம். இதுபோல் இவ்வுலகத்தில் சுகங்களை யடைவதற்கு பகவானுடைய கிருபை காரணம். மனிதர்களுக்கு விரக்தி யுண்டாவது அரிது. உலக இன்பங்களிலேயே மனம்வைத்துப் பொருளைத் தேடுவதிலும், அழிப்பதிலும், பிறரை ஹிம்ஸிப்பதிலும், ஆட்டபாட்ட விநோதங்களிலும் காலத்தைச் செலவிடுவார்கள். ஒழிந்த வேளைகளிலாவது பகவந்நாமத்தை ஸ்மரிப்பார்களா? பகவத் தியானமே அவர்களின் ஹிருதயத்தில் பிரவேசிக்கவில்லை. இதனாலன்றோ கஷ்டநஷ்டங்களும் அபவாதங்களும் அவர்களைப் பீடிக்கின்றன. ஸர்வாந்தர்யாமியான ஈசுவரனை யறியாத மனிதன் நராதமனேயாவன். ராக்ஷஸர்கள்கூட ஸமயம் வந்தபோது பரமேசுவரனை ஸ்தோத்திரத்தால் திருப்திசெய்து வரம் பெறுவார்கள். இராவணன் ஸ்துதிய வசனங்களால் ஈசுவரனைப் பஜித்ததினாலன்றோ பூலோக தேவேந்திரனாயிருந்தான். ஈசுவரத் தியானத்தால் அநேக அத்புத விஷயங்கள் அப்போதப்போது தோன்றும். உலகத்தில் நரர்களாய்ப் பிறந்தவர்கள் தெய்வத்தியானம் செய்யாமலிருப்பது பாபமாகும். ஆதலின், ஸர்வேசுவரனுடைய பாதபத்மங்களை ஸதா தியானிக்கக்கடவோம்.

ஃ

"அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்பதுபோல், மனுஷ்யர்களின் நல்ல தன்மை அவர்களுடைய முகத்தில் பிரகாசிக்கும். நல்லவர், கெட்ட

வர் என்ற இரண்டுவகை மனிதர்களும் பிரகாசம், காந்திஹீனம் ஆகிய இரண்டுவித குணங்களைக் கொண்டிருக்கின்றனர். அநேக நியாயாதிபதிகள் தம் முன்பு வரும் குற்றவாளிகள், ஸாக்ஷிகள், பிராதுக்காரன் ஆகிய மூன்று வகையினரையும் அவர்களுடைய முக அமைப்பால் நல்லவர், துஷ்டர் என்று கண்டுபிடிக்கின்றனர். இவ்விதமே, உண்மையான பக்தனையும் அவனுடைய முகத்தைக்கொண்டே அறியலாம்.

ஃ

"உண்டென்பார்க்குண்டு, இல்லையென்பார்க்கில்லை" பக்குவர்க்கன்றி வேதாந்த உபதேசம் ஏன் கூடாதெனில்,—எவன் வேதாந்த ஞானம் தன் சுகத்துக்கு அவசியமானதென்றறிகிறானோ அவன்தான் உபதேசத்தை அன்போடு கிரகிப்பான். எந்த விஷயம் மனதில் அவனோடு கிரகிக்கப்படுவதில்லையோ, அந்த விஷயம் மனதில் தெளிவாய்ப் படுகிறதில்லை. உள்ளத்தில் பதியாத வேதாந்தோபதேசத்தால் பயனில்லை. தவிர, பக்குவியல்லாதவருக்கு வேதாந்த உண்மையில் விசுவாசமிராது. விசுவாசமாவது நம்பிக்கை. எந்த விஷயத்தில் ஒருவனுக்கு விசுவாசமில்லையோ அவனுக்கு அந்த விஷயம் விகல்பமாகத்தான் புலப்படும். ஒருவன் விசுவாசியானால் அவனுக்கு விகல்பமான விஷயமும் விகல்பமற்றுத் தோன்றுவது ஸகஜம். பக்குவமடையாதவனின் விசுவாசமற்ற தன்மையானது அவனுடைய அறிவைப் பேதப்படுத்தி உண்மையை அவனிடத்தில் மறைத்துவிடும். கேட்பவர்களின் பக்குவத்தை யனுசரித்தே உபதேசிக்கவேண்டும். எப்படித் தனது அந்தரங்க பத்தினியிடத்தில் ஒளிக்கவேண்டிய ரகசியம் பர்த்தாவுக்கில்லையோ, அவ்வாறே, வேதத்துக்கும் தன்னை உண்மையாய் ஆசிரயித்தவனிடத்தில் மறைக்கவேண்டிய ரகசியமில்லை. பிரம்ம—க்ஷத்திரிய—வைசிய—சூத்திர என்னும் வருணாசிரம பேதங்களை வேதம் பாராட்டுகிறதில்லை.

ஃ

"ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லுகிறார்":—"மனுஷ்யன் இவ்வுலகில் தாமரை இலையைப்போலிருக்கவேண்டும். தாமரை தண்ணீரிலேயே உண்டானாலும் அதனால் நனைகிறதில்லை. அதுபோல் மனுஷ்யன் உலகத்திலுண்டானது உண்மையானாலும் அவன் உலக வியாபாரங்களில் தன்னுடைய புத்தியைச் செலுத்தாமல் எல்லாக் கர்மங்களையும் ஈசுவரார்ப்பணம் செய்து, தன்னுடைய ஹிருதயத்தையும் சரீரத்தையும் கடவுளுடைய காரியத்திற்கென்று கட்டிப்போட்டால் நிச்சயமாக மோக்ஷத்தை யடைவான்." நமக்குப் பொருள் கிடைக்கவேண்டுமென்றும், நாம் சுவர்க்கத்தை யடையவேண்டுமென்றும் ஈசுவரனைப் பிரார்த்திப்பது நல்லதாயினும், கடவுளே நமக்குப் பிரியகரமான வஸ்துவென்றும், அவரை யடைவதே நமக்கு உகந்த காரியமென்றும் மதித்து நாம் அவரை ஆராதிப்பது சிறந்த விஷயம். முக்தியை யடைவதற்காக முதலில் மாயையைத் தொலைக்கவேண்டும். மாயை யொழிவதற்குக் கடவுளின் கிருபை வேண்டும். அந்தக் கிருபையை ஸம்பாதிப்பதற்காக அவரைப் பிரார்த்

---

கிராமவாசத்தில் சுகாதார சௌகரியங்களும் இன்பக் காட்சிகளும் மிகுதி. ஆனால், லௌகிக சௌகரியாதிகட்குப் பரம கஷ்டம். நகரவாசத்திலோ ஸகல லௌகிக வசதிகளுமுண்டு. ஆயின், கிராமவாச இன்பம் அரிது.

திக்கவேண்டும். இவ்வாறு ஈசுவரனைப் பிரார்த்திக்கும்போது நம்முடைய மனம் சுத்தமாயிருப்பது அவசியம். அசுத்தமான ஹிருதயத்தையுடையவர்களுக்கு ஈசுவர கிருபை யொருநாளுமுண்டாகாது. ஆதலின், மனுஷ்யன் சுத்தமான ஹிருதயத்துடன் பகவானிடம் பக்தி செய்தால், அவருடைய கிருபையின் ஆதாரவைக்கொண்டு முக்தனாகிப் பிரம்மாநந்தத்தை யனுபவிப்பான்.

ஃ

"கோபிகா வஸ்திராபஹரணம்" எதிலும் தத்துவப்பொருளை யுணரவேண்டும். கோபிகைகள் தங்களின் ஆடைகளைத் தருமாறு கண்ணனை வேண்டினர். இரு கையும் கூப்பித் தொழுதால் தருவதாக ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறினர். கோபிகைகள் நாணத்துடன் ஒரு கையால் தங்களின் அங்கத்தை மறைத்து மற்றொரு கையைத் தூக்கி வணங்கினர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவர்களை நோக்கி ஸர்வத்தையும் மறந்து யாவற்றையும் எனக்கே அர்ப்பணம் செய்து இருகரங்களையும் உயரக்கூப்பி வணங்குங்கள் என்றார். அந்த சமயம் கோபிகைகளின் மனதில் பக்திப்பாவசம் உண்டாகித் தங்களையே மறந்து எங்கும் கண்ணனையே காண்போராகி இருகரங்களாலும் பகவானைத் தொழுதனர். இவ்விதமே, பாஞ்சாலியும் துரியோதனன் சபையில் தன் மான ஸம்ரக்ஷணார்த்தத்திற்காக தன் பர்த்தாக்களையும் மற்றவரையும் வேண்டிப் பயன் படாது போகவே, கடைசியில் தான் அதுவரையில் உறுதியாய்ப் பற்றி நின்ற ஆடையின் பிடிப்பை விட்டு விட்டுத் தன்னையே மறந்து இருகரங்களையும் உயரக்கூப்பிப் பகவானைத் தியானித்து இவ்வுலகையும் தன்னையும் மறந்து நின்றாள். எங்கும் நிறைந்துள்ள கடவுளும் அவளது மானத்தைக் காத்து ரக்ஷித்தார். இதனால், தமக்குள்ள ஸர்வத்தையும் ஈசுவரார்ப்பணம் செய்வோர் பக்கலில் பகவான் நிச்சயமாய்க் கிருபை செய்வாரென்றும் அறியலாம்.

ஃ

"கிறிஸ்து மதமும் ஹிந்துக்களும்" கிறிஸ்துவர்கள் ஏராளமான திரவியத்தைச் செலவழித்து பிரம்மாண்டமான கோயில்களை ஏன் கட்டவேண்டும்? ஏன் சிலுவையை சுத்தமாக வெண்ணி கோயிலில் வைக்கவேண்டும்? அவர்கள் மட்டும் சிலுவையை வைக்கலாம்; நாம் விக்கிரகத்தை வைத்துக் கொள்ளலாகாதா? இன்னும் நாம் பிள்ளையார் சுழிபோட்டால் கிறிஸ்துவர்கள் நம்மை ஏளனம் செய்கிறார்களன்றோ? அப்படிப்பட்ட கிறிஸ்துவர்கள் எழுதிய கடிதங்களில் சிலுவையைப் போடவில்லையா? கிறிஸ்துவர்கள் சிலுவையைத் தரித்துக்கொள்ளுகிறார்கள். நம்மவர்கள் ருத்திராட்சம் இலிங்கம் முதலியவற்றைக் கட்டிக்கொள்ளுகிறார்கள். உரோமன் கத்தோலிக் துறவிகள் ஜபமாலையுடன் கடவுளைத் தியானிக்கின்றனர். அப்படியிருக்க, ருத்திராக்ஷ மாலையும், துளசி மாலையும் நாம் அணிந்து கொண்டால் அதை அநாகரீகமென்று அவர்கள் எப்படிச் சொல்லலாம்? உரோமன் கத்தோலிக் கிறிஸ்துவர்கள் மாதாகோவிலுக்குப் போனால், நாம் ஜெகதீசுவரியான அம்பிகையின் ஆலயத்திற்குப் போகிறோம். ஒரு வேளை புரோடஸ்டாண்டு பாதிரிகள் விக்கிரகங்களை வைத்துக் கொள்ளாமல் மனதினாலேயே தியானம் செய்கிறார்களென்றால், அவர்களும் தங்களுடைய மனதில் தேவனை ஒரு ரூபமாகப் பாவித்துத்தானே தியானிக்க

---

நவீன நாகரீகத்தில் கற்பு கெட்டவளாயினும் விவாகமாகிவிட்டால் அவள் உத்தம பத்தினிபோன்றும் பதிவிரதைபோன்றும் பாராட்டப்படுவாளாம்.

வேண்டும்? நாம் தேவனை ஒரு ரூபமாகப் பாவித்தது போதாதென்று எதிரில் விக்கிரகமாய் வைத்து ஷோடசோபசாரங்கள் செய்கிறோம். ஈசவரன் ஸர்வ வியாபகரென்று கதறும் கிறிஸ்துவர்கள் விக்கிரகத்தில் மட்டும் அவர் வியாபிக்கவில்லை யென்று எவ்வாறு சொல்லக்கூடும்? சிநேகிதர்களாயுள்ள இருவரில் ஒருவர் படத்தை இன்னொருவர் பார்த்துக் கொள்வது ஸஹஜம். அதற்குக் காரணம் அப்படத்தைக்காணும் போதெல்லாம் நேசனைப்பார்த்தது போலிருக்கு மென்றதனாலல்லவா? அதுபோல், நமது ஆசைக்குரிய பகவானைக் காண்பதற்காக நாம் விக்கிரகாராதனை செய்தே தீரவேண்டும். இப்படிச் செய்தாலன்றித் தன்னைத்தான் அறியும் ஞான முண்டாகாது. மேற்கூறியவற்றால், கிறிஸ்துவமதத்தை நாம் தூஷித்ததாகக் கொள்ளலாகாது. கிறிஸ்து நாதர் அன்பின் உருவம் என்பதை நாம் ஹிருதய பூர்வமாய் அறிவோம்; துதிப்போம். கிறிஸ்துவர்களிற் சிலர் ஹிந்துமத ஸம்பிரதாயங்களைப் பழிப்பது அநுசிதமென்று மாத்திரம் குறிப்பிட்டோமேயன்றி வேறல்ல.

ஃ

"பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெறும்" அதுபோல் தக்கோருடன் பக்குவ மடையாதவரும் கூடுவதில், அவர்களுக்கும் ஒருவித பக்குவம் லபிக்கிறது. வைத்தியம் தெரியாவிடினும் வைத்தியரிடம் வேலையிலிருப்போன் பலபாக முறைகளை யறிந்து குட்டி வைத்தியனுகிறான். சிஷ்யன் குருவைச் சேர்ந்து மேன்மையைப் பெறுகிறான். ஒரு வித்துவான் ஒரு கூலிக்காரனின் தலையில் தமது புஸ்தக மூட்டையை வைத்து, நீ இவற்றை யெல்லாம் வாசித்து அநுபவிக்கப் பாக்கிய மில்லாவிடினும், அவற்றைத் தூக்கும் பாக்கியமாவது உனக்குக் கிடைக்கட்டும் என்றார். வியாதியஸ்தன் உண்ண முடியாமற் போயினும் கண்ணாலாவது பார்த்துக்கொள்ளட்டுமென்று பலவகைப் பழங்களையும் பக்ஷணங்களையும் ஒரு தட்டில் நிறைத்து அவன் அருகே வைப்பதுண்டு. அதுபோல், நாம் பகவத் பக்தி செய்ய அத்தனை பாத்திரர்களல்லாதிருப்பினும், பகவான் திருக்கோயில் கொண்டுள்ள ஆலயத்திற்குப் பிரதிதினமும் சென்று வருவோமாகில், அதனால் நமக்கும் நாளடைவில் பக்தி பெருகி பகவத் கடாக்ஷத்திற்கு அருகராவோம்.

ஃ

"உன்னையன்றி எனக்கு யாருண்டுதுணை இவ்வுலகில்!" உலகத்தில் தந்தை, மகன் என்ற இரண்டுக்குமுள்ள சம்பந்தம் வேறு. பரம பிதாவாகிய பகவானுக்கும் அவருடைய புத்திரர்களாகிய மனுஷ்யர்களுக்குமுள்ள சம்பந்தம் வேறு. பின்னால் கூறிய சம்பந்தம் சூரியனுக்கும் அவனுடைய கிரகணங்களுக்குமுள்ள சம்பந்தத்தை யொத்திருக்கிறது. சூரியன் அஸ்தமித்தவுடன் அதன் கிரணங்களெல்லாம் ஒரு நொடியில் மறைந்துபோகின்றன. அதுபோல், பகவானுடைய கிருபை நீங்கிய க்ஷணமே மனுஷ்யன் மழுங்கிப்போகிறான். மகா பராக்கிரமசாலியாகிய அருச்சுனனின் வில் ஸ்ரீகிருஷ்ணபகவான் இவ்வுலகினின்று மறைந்ததும் பயன்படாமற் போய்விட்டதன்றோ? தன்னிடமிருந்து கள்வர்கள் அபகரித்துச்சென்ற ஸ்திரீகளை மீட்பதற்கு அருச்சுனனால் கூடவில்லை. பகவானுடைய கடாக்ஷம் இருக்கும்வரை மகா விவேகியாயும் மேதாவியாயும் மனுஷ்யன் விளங்குகிறான். இது பிரத்யக்ஷாநுபவம்.

ஃ

"பகவத் பிரார்த்நனே" கிருபாநிதியாகிய அப்பனே! அபார கருணை யுடன் அடியேமுக்கீந்த செல்வ சுகங்கள் எம்மை இவ்வுலக ஜாலத்தில் அகப் படுத்தாமல் அவைகளைக் கிரமப்படி யனுபவிக்கும் வழியை யுணர்த்தியருள் வாய். இச்செல்வத்தால் கர்வமும், பெருமையும், வஞ்சனை மோசங்களும் அடையாமல் நின் அளவிறந்த நன்மையின் பொருட்டு நன்றியறிதலும், பணி வும் எம்மனதில் கொள்ளும்படி கிருபைசெய்வாய்.

உலக வியாபாரத்தில் மூழ்கவேண்டுமென்னும் உத்தேசியத்துடன் செல்வப்பேறு அடியேனுக்கு அளிக்கப்படவில்லை யென்றும், மற்றபடி அதை யளித்த எம்பெருமானாகிய நின்னை உகந்துகந்து உளமகிழ்ந்து உத்ஸாகத் தோடு நின் பொருட்டாய் கைங்கரியங்களைச் செய்வதற்கென்று அனுக்கிர கிக்கப்பட்டதென்றும் யாம் என்றும் மறவாதிருப்போமாக. எங்களின் செல் வச் செருக்கானது மனஸ்ஸாக்ஷியை மழுங்கச் செய்யாமலிருக்க அனுக்கிர ஹிப்பாயாக.

கருணாவாரிதியே! நின் ஒப்பிலா அருள் இருந்தவாறென்னே! ஐசுவரிய ஸம்பன்னர்களை மட்டுமன்றி எளியோர்களையும் மிகு செல்வமான நிலையி லேயே வாழவைக்கின்றாய். யாவும் செலவழிந்து கையிலிருப்பது இரண்டு மூன்றணாவே என்னும்போது, என் செய்வதென்று அன்னோர் ஏங்குங்காலை அவர்களைத் தேடிவந்து பிறர் பணம்கொடுத்துப் போகச்செய்தும், ஒரு வியா பாரத்தால் அவர்களுக்கு ஒரு புதுவரவு உண்டாக்கியும் அவர்களின் கண்ணி ரைத் துடைத்துத் தைரியம் புகட்டுகின்றாய். ஒருவன் தனது பெட்டியில் சில குறைந்த தொகைகளை வைத்திருந்து அவற்றைச் செலவிடவொண்ணாதென் றும், ஒரு அவசரத்திற்கு உதவுமாறு பத்திரப்படுத்திவிட்டு இனிமேல் கைக் குக் கிடைப்பதையே செலவிட்டுச் செல்லவேண்டு மென்றும் எண்ணுகின்றா னாக, பின் அவன் கையிலுள்ளவை யனைத்தும் தீர்ந்து, சோர்ந்து தயங்குகை யில், தக்ஷணமே அவனுக்கு எங்கிருந்தாவது செலவுகளுக்குப் பணம் கிடைக் கச் செய்து, அவன் விருப்பத்தின்படியே பெட்டியிலுள்ளதைத் தொடநேராத நிலையில் அவனை நடத்திச் செல்லுகின்றாய். எப்போதும் பக்கவில் தாயைப் போன்றுந் துணையிருந்து காத்தருள்கின்றாய். ஹா! தேவா! நின் கடாக்ஷம் தான் என்னே! என்னே!

இங்ஙனமாக, நின்னருளால் இவ்வுலக ஐசுவரியத்தை அனுபவிப்பதி லும், அபேக்ஷிப்பதிலும் நினை மறந்திடாமலிருப்போமாக. இச்செல்வத்தை இப்போது எவ்வளவு களிப்புடன் அனுபவிக்கின்றோமோ, அவ்வளவு களிப்புட னேயே அதை மீண்டும் கைவிட நேர்ந்த எந்நிலையிலும் துணிந்த நெஞ்சுள் ளோராய், சமசித்தராய் வாழக் கற்பித்தருள்வாய். உலகத்தின் மாயையானது எம் ஹிருதயத்தைச் சூழாமற் செய்து, இவ்வாழ்க்கையில் மிகவும் உயர்ந்த பெருமைகளும், சிறந்த இன்பங்களும் க்ஷணகாலத்தினவே யென்று எப் பொழுதும் அறிந்து ஒழுக உதவி செய்வாயாக. அழிவில்லாததும், ஆத்மப் பேறானதும், நீதிமானின் ஹிருதய நீதியுமாகிய சத்திய சன்மார்க்கத்தையே என்றும் அவாவக்கடவோமாக. ஓம் தத் ஸத்.

---

ஒருவனுக்கு வியாதிவந்த காலத்தில் ஜாடையாக விலகியிருந்துவிட்டு அவன் சுகமானவுடன் க்ஷேமம் விசாரித்து அவனுடன் குலாவ வருகிறார்கள்.




# சட்டெனத் தோன்றும் புது அறிவு

## அல்லது கால சக்தியின் தூண்டுதல்.



"ஆவது"—என்பது சிலருக்கு அதிர்ஷ்ட வசத்தால் உண்டாவது; வேறு சிலருக்குத் தற்செயலாய் சித்திப்பது. சோம்பி நிற்பவரிடத்தும் ஒவ்வோர் சமயம் ஒரு புதுக்கருத்து தோன்றிக்கொண்டு அதனால் அவர்கள் மிக்க மேம்பாடு அடைந்ததுமுண்டு. வெளிக்குச் சோம்பராகக் காணப்படினும், உண்மையில் அவர்கள் சோம்பிக்கிடந்தவாராகயின்றி ஸதாகாலமும் ஏதேனும் சிந்தித்தவாறுகவே இருந்திருப்பர். அந்த சிந்தனையின் வழியே இந்தக் கூர்மையான புது எண்ணமும் சட்டென்று உற்பவித்திருக்கக்கூடும். அவ்வளவேயன்றி, எவ்வித ஆலோசனையுமற்று முற்றிலுமே சோம்பியிருப்போருக்கு எவ்வித புதிய எண்ணமும் எழாது. ஒருகால் அவ்வித நூதனக் கருத்துகள் அவர்களின் மனத்திடை உதயமாயினும், அதையும் தங்களின் சோம்பலுக்கே பலியிட்டுத் தீர்ப்பர். ஓயாது தூங்குவோனின் வாழ்வு தூங்கித்தான் போகும். "ஆகும் காய் பிஞ்சிலேயே தெரியும்" என்பதுபோல, இளமையிலேயே ஒருவனது அபிவிர்த்திக் குணங்கள் தெளிவாய்ப் புலப்பட்டுவிடும். துடுக்குச் செயல்கள் செய்யும் சிறுவனாயினும், அதில் அவன் காண்பித்துக்கொள்கிற கூரிய புத்திக்கு நாம் மதிப்பு தரவேண்டும். இளமையில் உண்டாகும் விவேகம் பிற்காலத்தில் பெருந்துணை செய்யும்.

ஃ

தான் பிறரிடத்தில் ஊழியத்திற்கு அமர்ந்து ஜீவிப்பது கூடாதென்றும், தானே தலைவனாய் சுயேச்சையாக இருக்கவேண்டுமென்றும் எண்ணமிடுகிற ஒரு சிறுவன் பிற்காலத்தில் அவ்வித சுதந்திர நிலையொன்றையே பெறுமாறு அதற்கேற்றதான புதிய

சொந்த சங்கதிகளைக் குறித்து நூல் வழியில் எதும் எழுதலாகாதென்கிறார்கள். சொந்த சங்கதியின்றி அனுபவமாய் எழுத எவ்விதம் முடியும்?

கருத்தொன்றும் அவன் உள்ளத்தே எழுதல்கூடும். அதை அவனும் உறுதிப்பிடியாய்ப் பற்றிக்கொண்டு முயன்று உயர் நிலையைக் கிட்டி விடுவான். இடையில் சில சோதனைகள் நேர்ந்து தன் முயற்சி சிதறி நஷ்டங்கண்டு வீட்டில் உட்காரும்படி நேர்ந்தபோதிலுங்கூட அவனது எண்ணங்கள் ஓயாது வேலை செய்தவாறாகவே இருக்கும். தாங்கொணு வறுமையால் நொந்து, அதனைல்தான் சிந்தித்த முயற்சிகளனைத்தையும் கைசோரவிட்டு ஒருவனிடத்தில் சம்பளத்திற்குப் போய் அமரநினைத்து அவ்விதமே அவனிடம் புறப்பட்டும் செல்வான். அங்குபோய்ச் சேருவதற்கு இடையிலேயே, "நாம் ஒருவனுக்கு உட்பட்டு ஊழியக்காரனுவதா ?"—என்ற ஆத்திர சிந்தைகள் பெருகிக்கொள்ளும். அதனுல் அவன் நடுவழியிலேயே மன முடைந்துதன் வீட்டுக்குத் திரும்பிவிடும்படி யாகலாம். ஒருக்கால் குறித்த இடம்போய்ச் சேரினும், அவனது உள்ளெண்ணங்களை நன்குணர்ந்த கடவுள் அவனை ஒரு தலை நிமிர்ந்தோனுகவே நடப்பித்துச் செல்லத் திருவுளங் கொண்டிருத்தலால், அவன் சென்ற இடத்தில் சம்பளச் சேவகம் அவனுக்குக் கிட்டாதவாறும், அதிலேயே அவன் விழுந்து அமுகி ஊக்கங்குன்றிப் போகாவாறும் செய்து விடுகிறுர். தன் மனத்தை யடக்கிக்கொண்டு சம்பளத்திற்கு அமரச் சென்ற இடத்திலும் வேலை கிடைக்காது போகவே, அதுவும் தனக்கு நல்லதே யாயிற்றென்றும், தான் பிறரிடத்து அடிமையாகக் கிடந்து நாறுவதற்குப் பிறக்கவில்லை யென்றும் கருதியவாறு தன் வீட்டினை யடைகிறுன். மறுபடியும் தன் முந்திய முயற்சிகளைத் தொடங்கிக் கொள்கிறுன். இவ்வளவு பாடு படுகிறவனிடத்தில்தான் சட்டென்று ஒரு புது அறிவு உதயமாகின்றது. "ஓ! இவ்வழியில் சென்று பார்க்கலாம்" எனத் துணிந்து, அந்த அறிவு காட்டும் வெளிச்சத்தைப் பின்பற்றி, அவ்வழியில் சலியாது முயற்சித்து முடிவில் தானே தலைவனுய் விளங்கக்கூடிய ஒரு சுதந்தர வாழ்வினை அடையப் பெற்றுவிடுகிறுன். பிறகு தன் கால முற்றும் சுவாதீனனுகவே விளங்கி மதிப்பும் உயர்வும் புகழும்கொண்டு மேன்மை யுறுகிறுன். உலகினுக்கு உபகாரியுமாகிறுன். ஊக்கமுள்ளோ னெருவன் கால பேதத்தால் தளர்ந்து சோர்ந்துவிட்டகாலையும், எல்லாம் வல்ல கடவுள் அவனுக்குத் தோன்றுத்துணையாயிருந்து மீண்டும் அவனைத் தட்டி யெழுப்பித திடப்படுத்துகின்றுர். அந்த சமயத்தில்தான் அவனுக்கும் சட்டென்று ஒரு புது அறிவு எழுகின்றது. இங்ஙனம் எழும் அறிவு ஆண்டவனின் அருளால் உற்பவித்ததாகும். அது அந்த ஸர்வேச்வரனின் கருணையுமாகும். மனிதசக்திக்கு மீறிய புது

---

சிலர் அநுபவக்குறிப்புகளை எழுத அஞ்சுகிறுர்கள். ஏனெனில், அது தங்களைப்பற்றியதென எங்கே பிறர் அறிய நேருமோ, அதனுல் தங்களின் நற்பெயர் எங்கே கெட்டு விடுமோ என்ற அச்சத்தால் தான். இது கோழைத் தனமாகும்.

அறிவு இறைவனிடத்திலிருந்தே வருகின்றதென்பது உண்மை. யாவும் கால சக்தியின் தூண்டுதல்களே.

ஃ

"மாண்டி கிரிஸ்டோ" என்பவன் ஓர் வாலிப மாலுமி. அவன் தன் விரோதிகளால் ஜென்மதீபாந்தர சிக்ஷையுற்று ஓர் தீவினில் சிறைக் கைதியாய்க் கிடக்கின்றான். இவனுக்கு அடுத்த அறையிலுள்ள கைதி தான் தப்பித்துச்செல்ல ஓர் சுரங்கம் தோண்டுகிறான். அது குறி பிசகி மாண்டிகிரிஸ்டோவின் அறைக்கு வழிசெய்து விடுகின்றது. இருவரும் சந்தித்து நேசராகின்றனர். அடுத்த அறைக் கைதி தான் உணர்ந்துள்ள ஒரு பெரும் பொக்கிஷத்தின் இருப்பிடத்தை அறிவிக்கின்றான். சில நாள் சென்றபின் அக்கைதி வலிப்பு வியாதியால் திடீரென்று இறந்துவிட, அவன் அறைக்கு மாண்டிகிரிஸ்டோ சென்று பிரலாபித்துவிட்டு, "ஹா! சவம் ஒன்று தானா இந்த அறையைவிட்டு வெளிப்படும்? உயிருடன் தப்பித்துச் செல்லமுடியாதோ?" என்று துயரத்துடன் கூறுகின்றான். அந்த வேளையில் சட்டென்று ஒரு புது அறிவு அவன் மூளையில் தாக்கவே திடுக்கிடுகின்றான். இந்த சவத்தை நமது அறையில் போட்டுவிட்டு, அதைக் கட்டியிருக்கும் சாக்குக்குள் நாம் புகுந்து மேலே தைத்து விட்டால், நம்மை சவமென்று வெளியில் எறிந்துவிடுவார்கள்; நாமும் பிறகு தப்பித்துக்கொள்ளலாம்—என்று நினைக்கிறான் புதிதாய் எழுந்த அந்த அறிவையே கடைபிடித்து, அவ்விதமே செய்து தப்பித்துக்கொண்டு வெளியேறி, பெரும் பொக்கிஷத்தையும் கண்டறிந்து கோடீசுவரனாகி, தனது விரோதிகளை ஸர்வநாசம் செய்து, தான் நிரபராதி என்பதை நிரூபித்து, நல்லோரைக் காக்கும் மகோபகாரியாகின்றான். இவ்விதம் இவனுக்கு விடுதலை வாழ்வு தந்தது—சட்டெனத் தோன்றிய அந்தப் புது அறிவு ஆகும். அது கடவுள் செயல். அப்புது அறிவு தோன்றாவிடில் இவன் விடுதலையாதல் கூடுமோ?

ஃ

வெறுங்கையாவது, விவேகமாவது தனியே நின்றால், அதாவது முயற்சியற்றுக் கிடந்தால் எந்தக் காரியத்தையும் சாதிக்கமாட்டாது. காரியம் சித்திப்பது கருவிகளாலும் துணைவலியாலுமே. இந்த இரு சாதனங்களும் கைக்கும் வேண்டும்; விவேகத்திற்கும் வேண்டும். இவ்வுலகில் பெருத்தகாரியம் எதையும் செய்து முடித்தற்கு வேண்டிய உதவி தற்செயலாய் வருவதில்லை. சில வேளை சிந்தனையின்றித் துணிந்து நேர்ந்தபடி ஒன்றைச்செய்ய, அது குருட்டு வாய்ப்பாய் அதாவது அதிர்ஷ்டவசமாய் கனத்த லாபம் தரும்

---

உத்தமியின் கண்ணீர் வீணாவதில்லை. அவளைத் துன்புறுத்திய கணவனும் பிற்காலத்தில் நல்ல வாழ்வு வாழ்வதில்லை.

வழிபாய் வாய்த்துவிடுவதுண்டு. ஆயினும், பூலோக வியாபாரம் எனும் பிரயாணத்திற்கு தளரா முயற்சியும் சாதனையுமே அச்சமற்ற சுகமானபாதை. பலர் செல்லும் வழியும் இதுவே. சாதனை என்பது ஒன்றைப் பூர்த்தியாய்ச் செவ்வனே சாதித்துத் தீரவேண்டுமென்று கொள்ளும் மனோநிலையாகும். கண்ணெதிரில் தோன்றும் தேசக் காட்சிப்படம் எழுதப்பயின்ற வில்ஸன் எனும் நிபுணர் மிக்க அழகுடன் கூடியிருந்த ஒரு படத்தை எழுதி முடித்தபின்பு, சற்று தூரப்போய் நின்று, படத்தைக் கருத்தாய்க் கூர்ந்துபார்த்து, மறுபடியும் படத்தண்டைவந்து தமது சித்திரக்கோலினால் அங்கங்கே வேலைசெய்து இன்னும் அழகுபெற்றுத் தெளிவாகும்படி விளக்கினார். அவ்விதம் செய்ததில் இன்னும் அது நன்றாக அமைந்ததுடன், அதற்குப் புதிய களையும் உண்டாயிற்று. அவ்வித ஜீவகளை உண்டாக்கவல்ல கூரிய நுட்ப புத்தி நாலுவருஷம், பத்துவருஷம் படம் சித்திரிக்கப் பயின்றதால் உண்டானதல்ல. உள்ள நாள் உள்ள மட்டும் வருந்தி உழைத்தே அவருக்கு அந்தத் திறமை அமைந்தது. படம் சித்திரிக்கத் தொடங்கும் கால முதற்கொண்டே தன் காரியத்தைக் கூர்ந்து கவனித்தல் என்ற சாதனையைச் செய்துவராத ஒருவன் தன் பிழையைத் தான் உணரப்போவதுமில்லை; அவனுக்கு இன்னின்ன இடத்தில் திருத்தவேண்டுமென்பதான சட்டென்று தோன்றும் புது அறிவு உண்டாகப்போவதுமில்லை. முயற்சியின் வழியேதான் அந்தப் புது அறிவு தோன்றும்.

ஃ

உண்மையாய் உழைப்பவனுக்கு என்றும் உள்ள லக்ஷணம் தளராத கவனமும், பாடுகளும், முயற்சியுமே. பெரியோரெனப் பிரதிஷ்டை பெற்றவர்கள் ஆதியில் பயிலும் சாதனைகளை அற்பமென்று பராமுகம் செய்தவர்களல்லர்; அவைகளையே காதலாய்க் கருத்துகூர்ந்து பயின்றவர்களாவார். ஒரு நாள் மைகேல் அஞ்சிலோ எனும் சித்திர சிற்பியினுடைய சித்திரசாலைக்குப் போன ஒரு கனவான் முன்பு அங்கே சென்றபொழுது கண்ட பிரதிமையை அன்றிருந்தபடியே இருக்கக்கண்டு, பின்னிட்டு இதில் ஒரு வேலைப்பாடும் செய்யவில்லையாவென்று கேட்க, அதற்கு அஞ்சிலோ, "செய்யாமலென்ன; செய்தேன். இந்த உறுப்பைச் சற்றுச் செதுக்கினேன்—அந்த உறுப்பைச் சற்று விளக்கினேன்—இம்முகக்கடுப்பைச் சற்றுச் சாந்தப்படுத்தினேன்—அந்தத் தசைநாரைச் சற்று வெளிப்படையாய்த் தோற்றுவித்தேன்—இவ்வுதட்டுக்குச் சிறிது களை உண்டாக்கினேன்—அந்த அவயவத்திற்கு அதிக உற்சாகம் கொடுத்தேன்" என்றான். அது கேட்டுக் கனவான்,

---

எந்த சங்கதியிலும் பழய நட்பு கெடாதிருக்கும்படி தொடர்ந்து தலையசைத்தபடியே சென்றிடுவதுதான் உலகில் வாழும் வழி.

"இவையெல்லாம் வேலைத்தனத்திற் சேருமா—அற்பம்தானே?" என்று கூற, அதற்கு அந்த நிபுணன், "அற்பமாயிருந்தாலும் இருக்கும்; ஆனாலும் என்ன; அற்பமாகிய அணுக்கள் பல சேர்ந்தல்லவா எந்த உருவும், அழகும் அமைகிறது; ஆயிர மாகாணி அறுபத்திரண்டரை; இது தெரியாதா?" என்றானாம்.

ஃ

இவ்விதமே, நிக்கலஸ் பௌஸ்ஸின் எனும் சித்திரக்காரன் "செய்வன திருந்தச் செய்" என்பதுதான் நான் கைக்கொள்ளும் பிரமாணம் என மொழிந்தான். அவனுக்குப் பருவம் முதிர்ந்த பின், அவன் இஷ்டனாகிய மார்வில் விக்நியுயல் பிரபு, "இத்தாலிய சித்திர சிற்பிகளுள் உனக்கு இத்தனை விசேஷப் பிரக்யாதி உண்டான காரணம் எது?" எனக் கேட்க, அவன் "அலக்ஷியமின்றி எதையும் கூர்ந்து கவனித்துச் செய்துகொண்டு வந்ததனாலேயேதான் எனக்கு இத்தனைப் பிரக்கியாதி உண்டாயிற்று" என்று உத்தரம் சொன்னான்.

ஃ

ஒரு சமயத்தில் ஜான்ஸன்பண்டிதர், இத்தாலி தேசத்திற்குப்போய் வந்திறங்கிய நாகரீகாலங்காரப்பிரியர் ஒருவரைப் பார்த்து, "ஐயா ஐரோப்பா தேசத்துக்குப்போகும் பிரயாணிகள் அங்குள்ள அதிசயங்களைக் கண்டறியும் அறிவிலும், இங்குள்ள சிலர் நாடகசாலையில் அறிவது அதிகம்" என மொழிந்தனராம். எதையும் கூர்ந்து கவனிப்பவர்கள் எங்கு இருந்தபோதிலும் தாங்கள் காண்பனவற்றினின்றெல்லாம் ஒவ்வொரு தத்துவஞானப் பொருளை ஸூக்ஷ்மமாய் ஊகித்து அறிந்து, அதனைத் தங்களின் வாழ்விலே உபயோகித்துக்கொண்டு பயனடைவர் என்பது இதன் கருத்தாகும். அவ்வித பயனும் நலமும் பெறுதார் கண்டேன்?—காணுவிடிலென்? கண்டுங் காணுதார்க்கே ஒப்பாவர். கண்ணுக்கெதிரில் பார்ப்பனவற்றையெல்லாம் அறிவின் பொருளாகக் கொண்டு ஞானபிவிர்த்தி செய்துகொள்ளப் பழகுவோர்தாம் பிற்காலத்தில் பெரிய மேன்பாட்டினை எய்துதற்குரியோராவர். ஒருவனது உயர்வும், விருத்தியும் அவனது காட்சிக்கூர்மையின் நுட்பத்தைப் பொருந்துளது.

ஃ

இருந்தாற்போல் தற்செயலாய்க் கண்டறிந்த சூக்ஷ்மங்கள் உண்டெனவும் சொல்வார்கள். உள்ளுற நுழைந்து பார்த்தால் ஒன்றுவது தற்செயதாய்க் கண்டதன்றெனத் தோன்றும். தற்செயலெனச் சொல்வது பெரும்பாலும் சமயோசிதம் கண்டு புத்திபூர்வமாகச் சாதிப்பதையேதான். நியூட்டன் என்ற வானசாஸ்திரி

---

தாம் எவ்வளவோ இன்பம்பெறக்கூடிய நட்புக்குரியதான வஸ்து எதிரில் வந்து நின்றும், தமது அகங்காரம், சுயநலம், செல்வச்செருக்கு, அறியாமை இவற்றின் காரணமாக அதைப் பெறுதற்கில்லாதவராகிறார்கள்.

கண்டு வெளியிட்ட சில சூக்ஷ்மங்கள் தற்செயலாய் அவருக்குத் தெரியவந்தன என்று சொல்லுபவர்கள், அவர் பாதத்தண்டையில் இலந்தைப்பழம் விழுந்ததைப் பிரமாணமாய் எடுத்துக் கூறுவார்கள். ஆனாலும், நியூட்டன், பூமிக்கு எதையும் தன்னிடம் இழுத்துக்கொள்ளும் கவர்ச்சியான சக்தியுண்டென்னும் விஷயத்தை அதற்குமுன் நினையாதிருந்தவரல்லர். எத்தனையோ வருஷகாலம் உள்ளம் அழுந்தப்பொறுத்து அலுப்பற்றுத் தீரவிசாரித்துக்கொண்டிருந்தவர். இவர் சிந்தை வேறு துறையிற் செல்லாமல் இது ஒன்றிலேயே பிரவர்த்தித்திருந்தது. இலந்தைப்பழம் அவர் பாதத்தருகில் விழுந்ததானது, காக்கை மரத்தின்மீது ஏறினதற்கும் அதேசமயம் பனம்பழம் விழுந்ததென்பதற்கும் காலம் ஒன்றாயிருந்ததென்பதான காகதாளி நியாயத்திற்கு ஒப்பாகவே சொல்லவேண்டும். காக்கையானது பனம்பழத்தைத் தள்ளியதுபோல் தோற்றினும், காக்கை தள்ளவில்லை. அவ்விதமே, இலந்தைக்கனி விழுந்ததாலேயே பூமியின் கவர்ச்சி சக்தியை நியூட்டன் கண்டறிந்தாரென்பதுமில்லை. அவருடைய ஆராய்ச்சியின் விவேகம் முதிரக் கனிந்து விஷய சூக்ஷ்மத்தைப் பற்றும் பருவம் வெகு சமீபமாய் அடுத்திருக்கையில், அதேசமயம் அகஸ்மீகமாக அவர் பாதத்தண்டை இலந்தைப்பழம் மேலிருந்து விழுந்ததை அவரது கண் காணவும், மேகம் மின்னியதுபோல் சட்டென்று ஒரு புதுஅறிவு தோன்றி பளிச்சென்று அவர் புத்தியில் விஷயம் உதயமாயிற்று. மரத்திலிருந்து பழம் மேலேபோகாமல் கீழே விழுவதற்கு பூமிக்குள்ள கவர்ச்சி சக்தியே காரணம் என்று நிச்சயமாய்த் தெரிந்துகொண்டார். பெரிய மனிதருடைய சிந்தை பெருங் காரியங்களில் பிரவர்த்திக்குமென்று எண்ணுவது உலக இயற்கை. ஆனாலும், நியூட்டன்—யங் முதலியவர்கள் சாதாரணமாய் எப்பொழுதும் நடந்து வருகிற அற்ப விஷயங்களின் காரண—காரிய விசேஷங்களையே தங்களின் ஆராய்ச்சிக்கு உதவியாகக்கொண்டு கண்டறிய முயல்வதாயினர். அவைகளின் மர்மத்தைத் தெளிவுபடுத்திப் புத்தி பூர்வமாய் விளக்கியதே அந்த நிபுணர்கட்குப் பெருமையைத் தருவதாயிற்று. இதனால், ஏற்கெனவே சிந்தித்தவாறுள்ளவர்க்கே "சட்டெனத் தோன்றும் புது அறிவு" எதிர்படுமென்பது ஒருவாறு விளங்கும்.

ஃ

சிலர் தாம் காண்பதைப் புத்தி பூர்வமாய்க் காண்பார்கள்; கேட்பதையும் புத்தி பூர்வமாய்க் கேட்பார்கள். சிலருக்கு இந்த இயற்கை இல்லை. பெரும்பாலும் மனுஷருக்கு மனுஷர் வித்தியாஸம்

---

வீட்டுத் தலைவிகள் வீட்டில் இல்லாத நேரத்தில் அங்குள்ள குட்டித் தலைவிகளின் அரசாக்ஷியே பெரிதாயிருக்குமாம்.

உண்டாயிருப்பது இதிலேதான். காண்பதையும் கேட்பதையும் கவனிக்காதவர்களைப்பற்றி ஒரு பழமொழி உண்டு. "வனத்திற்குப் போவான்—அங்குள்ள மரம் ஒன்றும் அவன் கண்ணுக்குத் தெரியாது" என்ற இந்தப் பழமொழி இத்தகையோருக்கு வெகு பொருத்தமாகும். "அறிவாளிக்குக் கண் சிரசில்; மதிகேடனோ இருளில் நடப்பான்" என்று ஒரு ஞானி கூறினர். ஒன்றைக் காண்பது கண் மாத்திரமல்ல; கண்ணும் மனமும் சேர்ந்து காணவேண்டும். சிந்தனையில்லாமலே ஒன்றைக் காண்பவர்களும், கண்டதைத் தம் அறிவிலே சிந்தியாதவர்களும் அதைக் கண்டும் காணாதவர்களேயாவர். மனக்கண்ணொளியுள்ள விவேகிகளோ தாம் காண்பதைக் கருத்துக்கூர்ந்து நுழைந்தறிவார்கள்; பேதாபேதங்களைக் கண்டு குறித்துக்கொள்வார்கள்; ஒப்புயர்வு—தாழ்வு பார்ப்பார்கள்; உள்ளுறை பொருளைக் கிரகித்துக்கொள்வார்கள். அவர்கட்கே—அத்தகையோர்க்கே "சட்டெனத் தோன்றுகிற புது அறிவு"ம் எதிர்படும்.

ஃ

ஒரு குண்டைக் கயிறுகட்டித் தூக்கினால் அது ஊஞ்சல் ஆட்டம் ஆடுவது இயற்கை. இது ஒரு அற்பமான சாதாரண சங்கதி. இவ்விதம் இயற்கையாய் ஆடுவதை கலிலியோ என்ற சாஸ்திரிக்கு முன்னரேயே எத்தனையோ பெயர்கள் பார்த்திருப்பார்கள். பார்த்தனரேயன்றி அதைப்பற்றி எவரும் சிந்தித்தவரல்லர். கலிலியோவோ அதைக் கவனித்ததும் சட்டெனப் புது அறிவு தோன்றிக் கொள்ளவே, அவ்விதம் ஆடுவதின் சூக்ஷ்மத்தை உடனே உணர்ந்து கொண்டார். அவரே அந்த சூக்ஷ்மத்தை முதலில் அறிந்தவர். அவ்வூரிலிருந்த பைஸா எனும் ஒருபுறம் சாய்ந்துள்ளதான கோபுரத்தில் அங்குள்ள வேலைக்காரன் வழக்கம்போல் அவ்விடமிருந்த தூக்கு விளக்கொன்றில் நிறைய எண்ணெயை விட்டுத் தீபமேற்றிச் சென்றான். கயிற்றில் தொங்கிய அந்தத் தூக்கு விளக்கு எரிந்தவாறாக ஊஞ்சலாட்டம் ஆடியது. கலிலியோ அப்பொழுது அங்கேபோனார். அவருக்குப் பருவம் அதிகம் அல்ல, பதினெட்டுதான். அந்தத் தூக்குவிளக்கு ஒழுங்காய் இருபக்கமும் ஆடுவதை அவர் உன்னிப்பாகப் பார்க்கப் பார்க்க, அதைக்கொண்டு காலத்தை அளந்தறியும் உபாயம் அவர் மனதில் சட்டென்று புது அறிவாகத் தோன்றிற்று. இந்தக் கருத்தை ஆதாரவாக அணைத்துக் கடிகாரலம்பம் எனும் உறுப்பை அவர் வளம்பெறச் செய்து முடிக்க ஐம்பது வருஷம் இடையறாமல் வருந்திக் கற்றார். இதற்கு அவர் உழைத்த உழைப்பு மிகுதி. காலம் அளந்தறிவதிலும், ககோள கணிதங்களிலும் லம்ப

---

நமக்கு வேண்டியவன் என்று அந்த மனிதனை நாம் நினைக்கப்போக, அவனே நமக்குத் நிந்திப்பாகவே பேசிக்கொண்டு மற்றொரு பக்கம் நமக்குக் கனத்த சுண்ணும்பு தடவுவோனாகவு மிருக்கிறான்.

யந்திர உறுப்பின் அருமை பெருமையை எவ்வளவு பாராட்டிக் கொண்டாடினும் தகும். இவ்வாறே, உலாந்து தேசத்தில் மூக்குக் கண்ணாடிசெய்து விற்கும் லிப்பர்ஷி என்பவன் தூரத்திலுள்ள பொருளைக் கிட்டத்தில் தோற்றுவிக்கும் யந்திரம் ஒன்றை நாஸ்ஸா கௌண்ட் மாரிஸ் பிரபுவுக்குக் காணிக்கையாகக் கொடுத்ததாய்ப் போகடிபோக்காய்க் கேள்விப்பட்டு, கலிலியோ அந்த அதிசயத்தின் காரணத்தை நிர்ணயிக்க முயன்றார். இம்முயற்சித் துணையால் சட்டெனப் புது அறிவு ஒன்று தோன்றி, இவர் தூரதிருஷ்டி யந்திரத்தை யூகித்து உண்டாக்க வல்லவரானார். அவ்விதமே, தூரதிருஷ்டிக் கருவியும் செய்துமுடித்தார். அந்தக் கருவியே இக்காலத்தில் வழங்கும் ககோள சாஸ்திர விற்பத்திக்கும் மூலமாயிற்று.

ஃ

எனவே, இதனால் விளங்குவதென்ன ? தாங்கள் காண்பதைப் பராமுகமாய்க் காண்பவர்களுக்கும், தாங்கள் கேட்பதை ஒரு காதாற் கேட்டு மறுகாதால் விட்டுவிடும் பிரகிர்தியுள்ளவர்களுக்கும் இவ்வகைச் சூக்ஷ்மங்களை எளிதில் கண்டறியும் அருந்திறம் ஒரு பொழுதும் வாராதென்பதே. உன்னிப்பாய்க் கூர்ந்து பார்ப்பவர்கட்கும், பார்த்ததைப்பற்றி ஓயாது சிந்திப்பவர்கட்கும் மட்டுமே "சட்டெனத் தோன்றும் புது அறிவு உதயமாகும். சோம்பிக்கிடப்போருக்கு இந்தப் புது அறிவு எதிர்படாது. ஆதலின், நுனிப்புல் மேயாமல் எதையும் கருத்து கூர்ந்து கவனித்து, மனதில் பதித்து, ஸதா யோசித்தவாறாக ஆராயக்கடவோம். உழைப்பும் சலியா முயற்சியும் உள்ளவனுக்குக் கடவுளின் துணையும் அருளும் உண்டு.

---



## எதற்காக இரவில் ஜலம் அருந்துவது ?



இரவில் விழித்து வேலை செய்யும் ஆசிரியர்களும், சீர உழைப்பினரும் அடிக்கடி ஜலம் அருந்தும் அப்பியாசம் கொள்கிறார்கள். இவர்கள் அந்த இரவில் ஜலம் அருந்துவது தங்கள் வேலையின் களைப்பு தீரவும், புது பலம் பெறவும், தூக்கத்தைத் தடுத்துக்கொள்ளவுமேயன்றி தாகம் எடுத்துக்கொண்டல்ல. தூங்கிடில் பசிதாகமில்லை விழித்திருப்பினோ?—



நீ எவ்வளவுக்கு உலக வாழ்வில் கஷ்டப்படுகிறாயோ அவ்வளவுக்கும் உனக்கு அனுபவச் சரக்கு சேரும். நீ நஷ்டப்பட்டேன் என்கிறாய்—அதுவும் ஒரு கண்டறிந்த அனுபவமே.

# நற்குணத்தின் நலங்கள்.



குணம் என்பது திடீரென்று உண்டாகி விடக்கூடியதன்று; நினைத்த மாத்திரத்தில் எடுத்துப் போர்த்துக்கொள்ளக் கூடிய போர்வையுமன்று. நாடகத்தில் அரிச்சந்திரன் போல் வேடமிட்டு நடிக்கலாமேயன்றி, அவ்விதம் நடிப்பவனுக்கு அரிச்சந்திரனுடைய குணங்கள் உண்டாகி விடாது. நற்குணசாலிகள் போல் காண்பித்துக் கொள்வதிற் பயனில்லை. உண்மையிலேயே நற்குணசாலிகளாக ஆகவேண்டும். சிறு போதிலிருந்தே இந்தக் குணங்கள் படிந்து வளருபவை யாதலால் இளமையிலிருந்தே ஒழுங்கான பயிற்சியைப் பெற்றுவர வேண்டும். குணத்துக்குத் தகுந்தபடி புத்தியுமிருக்கும். புத்திக்கு ஏற்றவாறு நடத்தையும் அமையும். குணங்கள் என்பவை சிறுகச் சிறுகப் பழகியே விருத்தி பெறவேண்டும்.

ஃ

சிறு பிராயத்தில் பள்ளிக்கூடத்தில் தன்னுடன் வாசிப்பவர்களிடம் வெகு பிரியமாய் நேசித்து, அதே சமயத்தில் அவர்களுடைய காசையோ, பென்சிலையோ, புஸ்தகத்தையோ மறைத்து ஒளியவைத்து விடும் சிறுவன், பிறகு பெரியவனாகும் போதும் அதே குணத்தில்தான் பழகிப்போயிருப்பான். அவனுடைய வார்த்தைகள் அதிக அன்போடிருக்கும். அவன் செய்கையோ அன்பற்றுக் கடின சித்தமாய் கபடமாகவும் கெடுதி செய்வதாகவும் இருக்கும். இன்ன இடத்தில் நாம் கேட்ட சாமான் கிடைக்குமென்று சொல்வான். அடுத்த நிமிஷமே அந்த இடத்திற்கு ஒரு ஆள் மூலமாக அதிகமானவிலையைக் கூறுங்கள் என்று தெரிவித்து அனுப்புவான். நாம் அங்கு சென்று விலையைக் கேட்கும்போது நமக்கு வேண்டியவனே அதிகவிலை சொல்லும்படி தூண்டிய சங்கதியை அறியும்படியாகி, இப்படியும் ஒரு கபட மனிதன் உண்டா, அப்போது அவ்வளவு அன்பாகப் பேசினானே யென்று ஆச்சரியப்படுவோம். இந்தக் குணங்களெல்லாம் பள்ளிக்கூடத்தில் அவன் நடந்துகொண்ட மாதிரிகளிலிருந்தும் பழகிப்போனவைகளாகும். சிறு பிராயத்தில் சீர்படாத குணங்கள் பெரிய வயதில் திருந்துவது கஷ்டம். அவரவர்களுடைய குணத்தைத் தெரிந்து அதற்குத் தக்கபடி நாம் ஒதுங்கிப்போய் விடுவதே மரியாதையாகும். அவ்விதமின்றி அவனுடைய குண மாறுபாடுகளை எடுத்துச் சொல்லித் திருத்துக என்றால், அவன் ஒருநாளும் திருந்தப் தப் போவதில்லை. அதற்குப் பதிலாக இவன் நம்மை நன்றாக அறிந்துகொண்டு விட்டானே, நமது குணப்போக்குகள் இவனுக்குத் தெரிந்துவிட்டதே யென்று உள்ளுக்கு வருத்தமே கொள்வான். அதனால் பகை வந்தாலும் வரும். ஆகலின் நாம் ஜாடையாகப் போய் விடுவதே உத்தமம்.

ஃ

---

மோசக்காரனின் கோபத்திற்குப் பிறர் அஞ்சப்போவதில்லை. அவனுடைய ஏமாற்றுதல்கள் தெரிந்தபிறகு அவனை ஒருபொருட்டாய் மதிக்கப் போவதுமில்லை. வாத்து எங்காகிலும் தண்ணீரைக் கண்டு அஞ்சுமா?

இன்னொரு திருஷ்டாந்தம் பாருங்கள்: ஒருவன் மிக்க உழைப்பாளியாயும், ஜாக்கிரதை, நம்பிக்கை, சத்தியம், பொறுமை, நிதானம், உண்மை, ஊக்கம், ஆற்றல் முதலிய குணங்கள் உள்ளவனுயு மிருப்பதாக வைத்துக் கொள்வோம்; இக்குணங்களெல்லாம் அவன் வாலிப முதற் கொண்டே பழக்கி வந்தவைகளா அல்லவா? ஒருவன் பத்து வயதிலே காலையில் எழுந்திருப்பதையும், வேலை செய்வதையும், விளையாடுவதையும், படிப்பதையும் பார்த்தால், வயது வந்த பிறகு அவன் இன்ன விதமான மனிதனுவானென்பதை அப்போதே நாம் நன்றாய்ச் சொல்லலாம். வேளைக்குச் சரியாய்த் தின்னவராத பிள்ளை பாடசாலைக்கும் வேளையிலே போக மாட்டான்; அவன் ஒன்றையும் சரியான காலத்தில் செய்ய மாட்டான்; அவன் பின்பு ஒருபோதும் ஜாக்கிரதை யுள்ளவனுகவு மாட்டான். முகத்தைப் பாதி மட்டுமே கழுவுகிற பிள்ளை, அதாவது மற்றொரு பாதியைக் கழுவுவதற்குச் சோம்பலாய் விட்டு விடுகிற பிள்ளை தன் பாடத்தையும் சோம்பலாய்ப் பாதிதான் படிப்பான்; எந்தக் காரியத்தையும் பாதிதான் செய்வான்; அப்படிப்பட்டவன் ஒருபோதும் பூரண மனிதனுக மாட்டான். எவ்வளவு அற்பமாயினும் தன் வேலையை முன் அலக்ஷியம் செய்து, பின்பு நான் அதை மறந்தேனென்று, வாலிபத்தில் சாக்குச் சொல்லுகிறவன் பிறகு ஒருபோதும் நம்பிக்கைக் கிடமாக மாட்டான். கடையிலே சில சாமான்களை எட்டணுவுக்கு வாங்கி வரும்படி ஒரு ரூபாய் கொடுத்து அனுப்பினுல், எட்டணுவுக்குச் சாமான்கள் வாங்கி வந்து, பாக்கி எட்டணுவை உடனே திருப்பித் தாமல் அதில் ஏழணு எடுத்துச் சொந்தச் செலவு செய்து விட்டு, ஒரு அணுவை மட்டும் கொண்டு வந்து கொடுத்து, கடைக்காரன் சில்லரையில்லை யென்று சொன்னுன், சாயந்திரம் தருவான் என்று சொல்லி, அந்த சாயந்திரம் வேறு எவரிடமாவது மூன்றுணு கடன் வாங்கிக்கொண்டு வந்து கொடுத்து விட்டு, பாக்கி நான்கணுவைத் தராமலே பல நாட்களைப் போக்கி ஏப்பம் விட்டு விடுகிற சிறுவன் பிற்காலத்தில் பெரிய வியாபாரியானபோதும் அதே விதமான குணத்தில்தான் இருப்பான். அவனிடம் பிறகு எந்தச் சாமானும் வாங்கிவரும்படி சொல்லமாட்டார்கள். நம்பிக்கையென்பது அடியோடு போய்விடும். ஆரம்பத்தில் இது சிறு குற்றமாகத் தோன்றினுலும், இதுவே பிறகு பெரிய பிழையாக வந்துவிடியும். இவ்விதமே, எளிய ஜந்துக்களை வருத்தி அவற்றின் துன்பத்தைப் பார்த்துச் சந்தோஷிக்கிற பிள்ளைகள் ஒருபோதும் பூததயை பச்சாதாப முதலிய நற்குணமுடையவர்களாய் ஜீவகாருண்யர்களாகமாட்டார்கள்.

ஃ

பெண்களுடைய குணங்களும் இவ்வாறே. தாயை எதிர்த்துப் பேசுகிற பெண் இனி தான் வாழப்போகும் வீட்டிலும் எதிர் சொல் கூறும் பெண்ணுகவே இருப்பாள். தம்பியின் சிறு குற்றத்தைப் பொறுத்துக்கொள்

---

தான் தரவேண்டிய பாக்கிப் பணத்திற்கு எதிர் மனுஷ்யனிடம் எவ்வித ஆதாரவும் இல்லாதபடியே இருக்கும்படி ஆரம்பமுதற்கொண்டே மோசடியாக நடக்கிற மனிதர்கள் தாங்கள் ஏதோ சாமர்த்தியசாலிகளாக நினைத்துக்கொள்ளலாமே தவிர, தெய்வத்தின்முன்பு அவர்கள் அதோகதியாகி விருத்திகுன்றி க்ஷீணித்துப்போகிறுர்கள்.

ளாத பெண் தான் வாழ்க்கை நடத்தச்செல்லும் வீட்டிலுள்ள மற்றவர்களின் பிழைகளுக்குச் சகிப்புக்குணம் காட்டாதவளாய்ச் சண்டைகளுக்கு இடமாக்கிக் "கலகவல்லி"யாவாள். தாம் செய்யவேண்டிய வீட்டு வேலைகளில் கவலையற்றுப்போய், தம்மைச் சேர்ந்தவர்களுக்குச் சவுக்கிய முண்டாக்குவதிலும் சின்னஞ்சிறு வேலைகளைச் செய்து திருப்தியுண்டாக்குவதிலும் கருத்தில்லாமல், சிரும் சிக்கனமுமில்லாமல் இப்படியெல்லாம் சிறு பருவத்திலிருக்கிற பெண்கள் வயது வந்தபிறகும் நல்ல பெண்டிர்களாகமாட்டார்கள். தான தரும சிந்தையும், வேலையில் ஊக்கமும், ஸூக்ஷ்ம புத்தியும், மிதச்செலவும், பெருந்தன்மையும், எளியவர்களிடத்தில் ஆதரவும், ஒருவருக்கும் கொடுமை செய்யாமையும், சுடுசொல் சொல்லாமையும், பரோபகாரமும்—இவை முதலிய நற்குணமுடைய பெண்கள்தான் பிற்காலத்தில் ஒரு பெரிய சீமாட்டியாவார்கள்.

ஃ

இப்படிப்பட்ட குணங்கள் பலவற்றுள்ளும் பெரியோருக்குக் கீழ்ப்படிந்து அவர்கள் சொல்லுகிறபடி கேட்டுச் சரியாக நடக்கிறகுணம் சிறுவர்களிடத்தில் அவசியம் இருக்கவேண்டும். இந்தக் கீழ்ப்படிகிற குணம் ஒன்றுமட்டும் இருக்குமானால், இதைவிட அழகும், உயர்வும் வேறு வேண்டுவதில்லை. சிறுவர்களுக்கு நன்மை தீமைகளைப் பகுத்தறியச் சுயபுத்தி கிடையாதாகையால், அவர்களைக் காப்பாற்றுகிறவர்கள் தாம் அதைத் தெரிந்து அதன்படிச் சிறுவர்களை நடத்திவரவேண்டும். ஆதலால், அந்தப் பெரியோரிடுகிற கட்டளை இன்னதென்றும், இன்ன காரியத்திற்கென்றும் தமக்குத் தெரியாமலிருந்தாலும், சிறுவர்கள் அதைப் பூரணமாய் நம்பி, அப்படியே நடந்துவரவேண்டும். அதுவே அவர்களின் க்ஷேமத்திற்கு வழி.

ஃ

இதற்குத் திருஷ்டாந்தமாய் வெகு காலத்திற்கு முன்பு நடந்த பழைய செய்தி ஒன்றை இங்கு தருகிறோம். ஒரு சிறு குழந்தை தன் கீழ்ப்படிகிற குணத்தால் வெகு பயங்கரமான அபாயத்தினின்றும் தப்பிப் பிழைத்ததாக அந்தச் செய்தி குறிப்பிடுகின்றது. அக்குழந்தையின் தந்தை இருப்புப்பாதை வண்டி ஓடுகிறவழியில் வண்டிகளுக்குக் குறிகாட்டுகிறவன். அந்த வழியில் ஓரிடத்திலே நின்றுகொண்டு அவ்வழியாய் வருகிற வண்டிகளெல்லாம் ஒரு அபாயமும் இல்லாமல் போகும்படி ரயில்வண்டியோட்டுகிறவர்களுக்கு எச்சரிக்கை சொல்லுவது அவன் வேலை. அப்படியிருக்க, ஒருநாள் அவன் ஒரு வேகமான வண்டி வரவேண்டுவதை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கையில், ஒரு குழந்தை அந்தப் பாதையின் எதிர்புறத்திலிருந்து தன்னிடம் வந்துகொண்டிருக்கக் கண்டான். அதைப் பார்த்து அவன் மிகவும் பயந்து சீக்கிரமாய் ஓடி அதை எடுத்துக்கொண்டு வரவேண்டுமென்று முதலில் எண்ணினான். அவன் அவ்விடம் விட்டுப்போனவுடனே வண்டி வந்துவிடுமாயின், அதற்குத் தக்கபடி குறிகாட்டாமற் போனால், அண்டையிலே வெள்ளம் பெருகிவரும் காட்டாற்றுப் பாலத்தின்மேல் ரயில்வண்டி மிகவும் மெதுவாய்ச் செல்லவேண்டி

---

தான் வாங்கின கடனைக் குறித்த தவணையில் கொடுத்துவிட்டால் அங்கு நட்பும் நம்பிக்கையும் அதிகரிக்கிறது. கொடுக்காவிட்டாலோ—?

யிருக்கிற அவசியத்தைக் குறிப்பிடத் தவறியவனுவான். அதனுல் ரயில் வண்டி வழக்கம்போல் வேகத்துட னும் அந்தப் பாலத்தின்மீது ஓடி அதனுல் பாலத்திற்கு ஏதேனும் கெடுதியுண்டாகி, ரயிலும் ஒருக்கால் ஆற்றில்விழ நேர்ந்து அநேகம் உயிர்க ளுக்குச் சேதமும் உண்டாகலாம். தன் வேலையின் கடமையைத் தான் செய்யத் தவறியவனுகவும் போகலாம். அவன் இருக்குமிடத்திற்குச் சிறிது தூரத்தில் அந்தப்பாதை நன்ருய் வளைந்திருந்ததனுல், வண்டி இவ்வ ளவு தூரத்தில் வருகிறதென்பதையும் கண்டுகொள்ளக்கூடவில்லை. எப்படி யும் அந்த வண்டி வெகு ஸமீபத்தில் வந்துகொண் டிருக்கவேண்டு மென் பதுமட்டும் அவனுக்குத் தெரியும். இதற்கு என்ன செய்கிறதென்று அவன் திகில்பட்டுக்கொண்டே யிருக் கையில், திடீரென்று பயங்கரமாய் ரயில் வண்டித்தொடர் வந்து விட் டது.

ஃ

அப்போது அந்தக் குழந்தை தன் ஒரே அருமைக் குழந்தைதா னென்றும் அவனுக்கு நன்ருய்த் தெரிய வந்தது. அச்சமயத்தில அக் குழந்தை வண்டிப் பாதையின் ஒரு தண்டவாளத்தைக் கடந்து வந்து கொண்டிருந்தது; வண்டி வருவதற் குள் மற்ருெரு தண்டவாளத்தையும் தாண்டிவர நேரமில்லை. அதுகண்டு அவன் மிகவும் பயந்தானென்ருலும், தான் இருந்த இடம் விட்டு அசையா மலே குழந்தையைப் பார்த்து **அங்கேயே படுத்துக்கோள்** என்ருன். அப்படியே இரண்டு தண்டவாளத்திற்கும் நடுப்பள்ளத்தில் அது படுத்துக்கொண்டது. அக் குழந்தையின் மேல் வெகு பயங்கா மான இரைச்சலும் ஆரவாரமுமாய் மறு நிமிஷத்தில் வண்டி ஓடி வந்தது. வண்டி அப்புறம் போனதும் நிராசை யாய், அதிக துயா அழுகையோடும், தவிப்போடும், பெற்ற வயிறு ஒரு புறம் எரிய, குழந்தை இறந்து போயி ருக்கு மென்ற எண்ணத்தோடு போய்ப் பார்க்கையில் சிறிதும் அபாய மில்லாமல் குணசாலியான அக் குழந்தை அப்படியே படுத்துக்கொண் டிருந்தது. அக்குழந்தைக்குக் கீழ்ப் படிகிற குணம் இருந்ததனுலல்லவோ இந்தக்கொடிய அபாயம் நீங்கிற்று. அந்தச் செய்தியைக் கேட்ட ரயில்வே கம்பெனியின் தலைமை அதிகாரிகள் அக்குழந்தையைப் பற்றி விசேஷ கவ னம் வைத்து, அக்குழந்தை பெரியவ னை பிறகு ரயில்வேயில் தகுந்த கௌரவமான உத்தியோகத்தில் நிய மித்தனர். அக்குழந்தை தன் மேலதி காரிகளுக்கு விசுவாசத்தோடும் கீழ்ப் படிந்து நடந்து மேன்மையான நிலையையடைந்தான். ஆகவே, குணங் கள் சிறு பிராயத்திலேயே உண்டாகி விருத்தியடைய வேண்டுமே யன்றி திடீர் என்று உண்டாகி விடாது. இதைப் பெற்ருேர்கள் கவனித்துக் குழந்தைகளை இளமையினின்றே நல் வழியில் பயிற்றுவித்து நற்குண முன்னோராக்க வேண்டும். அங்ஙனம் செய்யத் தவறுவதினுலேயே "மக் களுக்குச் சத்துரு மாதா பிதா" என்பது.

---

பேசுகிருர்கள் வெகு இனிமையாக. ஆனுல் மனது போகிறது வேருெரு வழியாக. தங்கள் வீட்டிற்கு வந்தவனை, அவ்வீட்டிலுள்ள மற்ருெருவனுக்கு வேண்டியவனுக எண்ணி, அதற்காக அவனிடம் க்ஷேமசமாசாரம் விசாரிப் பதேயல்லாமல்———தங்களுக்கு அவன் வேண்டியவனுக நினைத்து விசாரிப் பதில்லை. இந்த விலகுந்தன்மை அவர்களின் "மூஞ்சி"யிலேயே தெரிகிறது. எனினும்,வீட்டுக்குள்வந்தோன் அதைவெளியே காண்பித்துக்கொள்வதில்லை.

# தும்மலின் விநோதம்.



பூர்வ கால முதற்கொண்டு உலகத்திலிருக்கும் சகல தேசத்தாரும் தும்முவதை வெகு விசேஷமான காரியமாகக் கருதிவந்திருக்கிறார்கள். சீனர்கட்குள், ஒருவர் தும்மினால் அவரைப்பற்றி வேறு யாரோ பேசிக்கொண்டிருப்பதாக நம்பப்படுகிறது. (இந்துக்களுள்ளும் இவ்வித நம்பிக்கையுண்டு.) இந்துக்கள் பூஜை செய்யும்போது தும்முவார்களாகில் மறுபடியும் பூஜையை ஆரம்பிக்கவேண்டும். இங்கிலாந்தின் வடபாகத்தில் தும்மலின் நன்மை தீமைகள், தும்மும் தினத்தைப் பார்த்து அனுமானிக்கப்படுகின்றன. திங்கட்கிழமை தும்முதல் ஆபத்தைக் குறிக்கும். செவ்வாயன்று தும்முதல் காதற் சம்பந்தமான விஷயத்தில் ஒரு நன்மையைக் காட்டும். புதனன்று தும்மினால், யாரிடமிருந்தோ கடிதம் வரப்போவதை அறிவிக்கும். வியாழனன்று தும்முதல் தமது நிலை மேன்மையாகப் போகின்ற தென்பதைத் தெரிவிக்கும். வெள்ளியன்று தும்முதல் ஒரு துக்ககர சம்பவம் நடைப்பெறப்போவதைக் காட்டும். சனியன்று தும்மினால் மறுநாள் ஞாயிற்றுக்கிழமை தமது காதலரைப் பார்க்கலாம் என்று தெரிந்து கொள்ள வேண்டியது.

ஸயாம் தேசத்தார்கள் தும்முவது வெகு அதிர்ஷ்ட முன்னது என்று நினைக்கிறார்கள். அவர்களுக்குள் ஒருவன் எத்தனை முறை தும்முகின்றானோ அவ்வளவு சிலாக்கியம் என்ற நம்பிக்கை யிருந்து வருகிறது. இதுவுமன்றி, விண்ணுலகத்திலிருக்கும் நீதிபதிகள் எல்லா மனிதர்களது பெயர்களுமடங்கிய ஒரு புஸ்தகம் வைத்திருக்கின்றனர் எனவும், அந்தப் புஸ்தகத்தை அவர்கள் திறக்கும் போது எந்தப் பக்கம் வருகின்றதோ அந்தப் பக்கத்தில் வரையப்பட்டிருக்கும் பெயர்களுடைய மனிதர்கட்கெல்லாம் தும்மல் வருகின்றதென்றும் ஸயாம் தேசத்தார்க்குள் ஒரு ஐதிகமுண்டு. வங்காளத்தில் ஒருவர் தும்மினால், அவருக்குப்பக்கத்திலுள்ளவர்கள் தலை குனிந்து அவருக்கு வணக்கஞ் செய்யவேண்டுமாம். போர்ச்சுகல் தேசத்தில் தும்முகின்றவரின் பக்கத்திலிருக்கும் ஆண்கள் தொப்பியைத் தலையிலிருந்து எடுத்து மரியாதை காட்டவேண்டும். இப்பொழுதும் இவ்வழக்கம் இருந்து வருகின்றது. ஜமைக்காவிலுள்ள நீகிரோ ஜாதியார்களில், நாசியில் தினவு உண்டாகித் தும்மல் எற்பட்டால், யாரோ தும்முகின்றவர் மீது கோள் சொல்லிக் கொண்டிருக்கிறார்களென்று நம்பப்படுகிறது. அமெரிக்காவிலிருக்கும் கரோலின நாட்டின் நீகிரோ ஜாதியார், சாப்பிடும்போது தும்மினால் எவராவது இறந்துவிட்டதைப் பற்றிக் கேள்விப்படுவோம் என்ற நம்பிக்கை யுடையவர்களா யிருக்கின்றனர்.

மகம்மதியர்கள் தும்முவதில் "கடவுள் தும்முவதை விரும்புகின்றார், கொட்டாவி விடுவதை வெறுக்கின்றார்" என்று முகம்மதுநபி யவர்களே கூறியிருக்கின்றார்.

ச. முனிஸ்வாமி பிள்ளை,
சரஸ்வதிசபைத் தலைவர்,
டர்பன், நெட்டால்.

# எழுதுவதில் வெற்றி பெறுதல்.



எதிலும் உடனே வெற்றி கொள்ள இயலாது. தோல்வியைக் கண்டு ஒருபோதும் பின்னடையவொண்ணாது. முதன் முதலிற் செய்யும் எதுவும் பழுதுபட்டே இருக்கும். குற்றங்குறைகள் மலிந்திருப்பினும் அடுத்த முறையில் திருத்திக் கொள்ளவேண்டும். அந்த அடுத்த முறையிலேயே சரிவரத் தேர்ந்துவிடவும் முடியாது. ஆயுள்கால முற்றிலும் ஒவ்வொரு புது அறிவு எதிர்ப்பட்டு மேலுக்குமேல் உயர்த்திச் சென்றவாறே யிருக்கும். நாமும் ஏன் அவரைப்போல் எழுதவொண்ணாதென்று முயல்பவன் சலியாது வருந்தி உழைப்பனேல், இன்று இல்லாவிடினும் இனியொரு காலத்திலேனும் வெற்றி அவனுக்கு உண்டு. ஆயினும், ஒரு முதல்நூல் ஆசிரியருக்கு ஒருபடி குறைந்து நிற்கலாமேயன்றி, அவருக்குச் சமமாக ஆகிவிடுவது முடியாது. உதாரணமாக, கம்பனைப்போன்றும், ஔவையைப்போன்றும் கவித்வம செய்யலாம்; ஆனால், அவர்களைப்போலவே ஆகிவிட இயலாது. ஃ

எழுதுவதில் வெற்றி பெறுதற்குச் சில வழிகள் உண்டு. அவையாவன :—

1. உன்னைச் சுற்றியிருக்கும் உலகத்தை எவ்விதம் தெரிந்து கொள்வதென்பதைப்பற்றி யோசி. இதற்குப் பத்திரிகைகளின் வாசிப்பு முதல் துணையாகும். நீதிநூல்களை விட அனுபவ நூல்கள் அறிவைத் தெளிவிக்கும். பல நண்பர்களின் பழக்கமும் தேவை. அவரது துர்க்குணங்களைக் கற்றுக்கொள்ளாத ஜாக்கிரதையுடனும், அனுபவங்களை மட்டும் அறிவதில் சிரத்தை வகிக்க வேண்டும். பல ஊர்களின் ஸஞ்சரிப்பும் தக்க பலன் தரும். சோதனைகளின் மூலமாகவேதான் உலக அறிவு சித்திக்கும். இங்ஙனமாக, தான் கண்டுணர்ந்தவற்றை எழுத்தில் அடக்கி ஒழுங்குப்படுத்தப் பழக வேண்டும்.

ஃ

2. உன்னுடைய பேனாவால் எப்படிப் பணம் சம்பாதிப்பது? நீ தக்க தேர்ச்சியுடையவனென்பதை நிரூபிக்க நீ ஓயாத வியாசங்களைப் பத்திரிகைகளுக்கு எழுதியவாறு இருக்கவேண்டும். உன் திறமை வெளிப்பட்டபின்பே நீ எழுதுவனவற்றிற்கு ஒரு மதிப்பு ஏற்பட்டுப் பிறகு பணமும் கிடைக்கும். இவ்விதமே, கதைகள் எழுதுவதிலும் உன் தேர்ச்சியைப் பிரபலப்படுத்தி உன் பெயரை உலகினர் அறியவைக்க வேண்டும். வியவகார ஞானத்தைப் பெற்று அவ்வழியில் உன் பேனாவை அசைக்கவும் முயலவேண்டும். பணம் சம்பாதிப்பதென்பதே உன் முதல் நோக்கமாயிருக்கவும் கூடாது. பணம் திரட்டுவதை இரண்டாவது லக்ஷியமாகக்கொண்டு, பிரதமத்தில் நீ மற்றவர்கட்கு சகாய புருஷனாகவும், இனிய நெஞ்சினனாகவும் உன்னைத் தயாரித்துக்கொள்ளவேண்டும். உத்தியோகம்—வர்த்தகம் முதலிய பல

துறைகளிலும் உன் பேனாவை ஓட்ட வேண்டும்.

ஃ

3. பத்திராசிரியர்கள் எதை விரும்புகிறார்கள்? உன் அறிவுக் கூர்மையையே அவர்கள் நாடுகின்றனர். வீணாகப் பெருக்கிச்சென்று வரைவது அவர்கட்கு விருப்பமில்லை. பத்து பக்கங்களில் தெரிவிக்கக் கூடியதை ஒரு பக்கத்தில் அடக்கி, அவ்விதமாகப் பல நூறு பக்கங்கள் எழுதும் திறனுடையோனையே அவர்கள் ஆசிக்கிறார்கள். அர்த்தபுஷ்டியான நடையையும் அவர்கள் விரும்புகிறார்கள்.

ஃ

4. புதிய ஆசிரியர்களின் அதிர்ஷ்டம்:—அதிர்ஷ்டம் என்ற வார்த்தை ஒருபுறம் கிடக்க, அந்த அதிர்ஷ்டசாலிகளும் ஓயாது முயன்று விஷயங்கள் வரைவதில் தக்கோரான பின்பே மதிக்கப்படுகிறார்கள். அதிர்ஷ்டத்தை நம்புவதைவிட, தனது உண்மையான உழைப்பினை நம்புவது பரமோத்தமம். முதலில் லாபத்தைப் பார்க்காதே. கீர்த்தியையே கவனி. கீர்த்திதான் அதிர்ஷ்டம்.

ஃ

5. உற்சாகமான தொழில் எது?:—உன் தகுதிக்குத் தகுந்ததாய் நீ நம்பித் தெரிந்தெடுத்துக்கொண்டதெதுவோ அதுவே உற்சாகமான தொழில். எந்த ஈனத் தொழிலையும் நீ உத்ஸாகத்துடன் செய்யப்புகின், அத்தொழிலுக்கே நீ ஒரு கௌரவம் கொடுத்தவனாவாய். உற்சாகம் உன் மனோநிலையைப் பொறுத்தது. எதிலும் உன் பேனாவை ஓட்ட வழி தானே வரும்.

ஃ

6. சொல்லித் தருபவர்களின் திறன்:—உனக்குக் கற்பிப்போரின் சாமர்த்தியம் ஒரு பங்காயிருந்தால், நீ கிரகித்துக்கொள்ளும் பக்குவம் மூன்றுமடங்கு அதிகமாக இருக்க வேண்டும். கிரகிக்கும் நுட்பத்திற்குத் தக்கபடி எழுதுகிற அறிவும் பெருகும். சொல்லித்தருவோர் வழி மட்டுமே தெரிவிப்பர். பிறகு அவ்வழியில் நடக்கவேண்டியவன் நீயே.

ஃ

7. பிறரது அபிப்பிராயம்:—நீ எழுதுவனவற்றில் பிறர் கொள்ளும் அபிப்பிராயத்தைக் கூர்ந்து கவனி. பிறர் கூறும் பிழைகள் ஒவ்வொன்றையும் திருத்திக்கொள். உன் எழுத்தில் பிழை பேசுவோர் எந்த வழியில் எழுதிச் செல்கின்றனரென்று ஆராய்ந்து நோக்கி அவ்வழியிலே நீ பழகிக்கொள். நல்ல அபிப்பிராயத்தை ஒவ்வொருவரிடமும் பெறுதற்கு இரவை அதிகமாக உபயோகித்து உழைத்து, பகற்காலத்தில் பல கல்விமான்களுடனும் சம்பாஷித்து, உன்னைப்பற்றி அன்னோர் நல்லெண்ணங்கள் கொண்டு மதிக்குமாறு உன்னைத் தயாரித்துக்கொள். முடிவில் வெற்றி காண்பாய்.

---

தாங்கள் செய்யவிருக்கும் விஷயத்தை வெளியில் சொல்லி விட்டார்களேயென்று கோபிக்கிறார்களே தவிர, தாங்கள் பிறர் அறியும்படி நடந்துகொண்ட தவறினை உணர்வதில்லை.

---

அச்சுக்கூடத்தில் அச்செழுத்துகளைக் கோர்க்கத் தெரிந்தவனை அருகில் வைத்துக்கொண்டு எந்த ரகசியமும் எழுத வொண்ணாது. அவன் தூரத்திலிருந்தே தலைகீழாக அதை வாசித்தறிந்து விடுவான்.




(306-ம் பக்கத் தொடர்ச்சி.)



“டிக்கன்ஸ்” என்பவரின் மொழிகள்.

834. Be true to your time in the morning.

உன் இளமையில் நீ உன்னுடைய காலத்தை உண்மையான வழியில் செலுத்து.

835. Conscience is an elastic and very flexible article, which will bear a deal of stretching and adapt itself to a great variety of circumstances.

மனசாட்சி என்பது மெலிந்ததும் ரப்பர் போன்றதுமான வஸ்து. அது அநேக கஷ்டங்களைச் சகிக்கக்கூடியது. ஆகையால் பலவித சந்தர்ப்பங்களுக்குத் தக்கவாறு அது தன்னைச் சரிசெய்து கொள்ளும்.

836. There are shades in all good pictures, but there are lights too, if we choose to contemplate them.

எல்லா நல்ல படங்களிலும் நிழல் விழுந்த இடம் இருக்கும். ஆயினும் நாம் நன்கு யோசிப்போமானால் வெளிச்சத்தையும் (நல்லதையும்) காணலாம்.

837. It is pleasant to turn from contemplating the strife and turmoil of political existence to the peaceful repose of private life.

ராஜரீகத்திலுள்ள சண்டை சச்சரவுகளைக் கவனிப்பதிலிருந்து குடும்ப வாழ்வின் அமைதியைக் கவனிக்கப் புகுதல் சந்தோஷத்தைத் தருகிறது.

838. If you have the abilities of all the great men past and present, you could do nothing well, without sincerely meaning it and setting about it.

பண்டைக் காலத்தும், நிகழ் காலத்துமுள்ள பெரிய மனிதர்களுடைய சக்திகள் உனக்கு இருக்குமானாலும், ஒவ்வொரு காரியத்தையும் உணர்ந்தும், ஒழுங்காகவும் செய்யாவிடில், நீ எதையும் செவ்வனே செய்யமாட்டாய்.

839. Poverty has its whims and shows of taste, as wealth has.

செல்வத்திற்கு இருப்பதுபோல் வறுமைக்கும் இஷ்டங்களும் விருப்பங்களும் உண்டு.

840. Thinking begets not only thought, but drowsiness occasionally.

சிந்தித்தல் யோசனை மாத்திரம் தருவதன்றி சிற்சில சமயங்களில் சோர்வையும் உண்டுபண்ணுகிறது.

841. Don't speak lightly of a true heart, which is all your own,...even in jest.

உனக்கே அர்ப்பணஞ் செய்யப் பட்ட உண்மை இருதயம் உடைய வர்களை விளையாட்டிற்காகிலுங் கூட அலட்சியமாகப் பேசாதே.

842. Work: don't make fine playing speeches about bread, but earn it.

வேலை செய்: உணவைப்பற்றி அரு மையான பிரசங்கம் செய்யாதே. அதைத் தேடுவதற்கு முயற்சி செய்.

843. In trickery, evasion, procrastination, spoilation, botheration, there are influences that can never come to good

தந்திரத்திலும், உபாயத்திலும், சோம்பலிலும், கொள்ளை யிடுவதி லும், தொல்லையிலும், ஈடுபடுத்தத் தக்க சக்திகள் பல உண்டு. அவைகள் சன்மார்க்கத்தின் சார்பாக வருவ தில்லை.

844. If our inclinations are but good and open-hearted let us gratify them boldly, though they bring upon us loss instead of profit.

நம்முடைய இஷ்டங்கள் நல்லதாக வும், களங்கமற்றதாகவும் இருக்குமா னால் அவைகள் லாபத்திற்குப் பதில் நஷ்டத்தையே உண்டாக்கினாலும், நாம் அவைகளைத் தைரியமாய்ப் பூர்த்திசெய்து முடிப்போம்.

845. Self-love and egotism are bad qualities, of which the unrestrained exhibition, though it may be sometimes amusing, never fails to be wearisome and unpleasant.

தற்பெருமையும், தற்புகழ்ச்சியும் கெட்ட குணங்கள். அவைகளின் வெளித்தோற்றங்கள் சில சமயங்க ளில் சிரிப்பை உண்டாக்கினாலும், மனச் சலிப்பையும், சந்தோஷமின் மையையும் உண்டாக்கப் பின் னடையா.

846. If the good deeds of human creatures could be traced to their source, how beautiful would even death appear.

மானிட ஜந்துக்களின் நற்செய் கைகளுடைய உற்பத்தி ஸ்தானத் தைக் கண்டுபிடிக்க முயற்சி செய்யின் இறப்புகூட எவ்வளவோ அழகாகத் தோன்றும்.

847. When duty calls we must obey

நம் கடமை நம்மைக் கூப்பிடும் போது நாம் அதற்குப் பணிந்திட வேண்டும்.

848. Of all fruitless errands, sending a tear to look after a day that has gone is the most fruitless.

உபயோகமற்ற எல்லா வேலைகளி லும்—சென்றுபோன நாளை எண்ணி வருந்துவது மிகவும் உபயோகமற்ற செய்கையாகும்.

849. It is not on earth that Heaven's justice ends.

கடவுளின் நீதி தர்மம் இம்மண்ணு லகத்தோடு முடிவடையவில்லை.

850. As I have observed that Time confuses facts occa-

நான தப்பிதமாக நடந்திருந்தால் மன்னிப்பு கோருவேன். என் பிழைக் காகவும் வருந்துவேன். என்மேல் தப்பிதமில்லா திருக்கையில் ஏன் பிறருக்கு நான் தலைதாழ்த்த வேண்டுமோ?

sionally, I hardly know what weight to give to its authority.

சிற்சில சமயங்களில் காலபலன் விஷயத்தைக் குழப்ப முயற்சி செய்கிறதை நான் பார்த்திருப்பதால், அதனுடைய (காலத்தினுடைய) அதிகாரத்திற்கு எவ்வளவு மதிப்பு கொடுக்கிறதென்பது எனக்குத் தெரியவில்லை.

851. But for some trouble and sorrow we should never know half the good there is about us.

சில கஷ்டங்களும், விசனங்களும் இல்லாவிடில், நம்மைச் சுற்றியிருக்கும் நன்மைகளில் பாதிகூட நமக்கு எப்போதும் தெரிந்திராது.

P. G. குலசேகரன்,
"மனோரஞ்சினி விலாஸ்"



## ஸ்ரீ தனத்தின் அலங்கோலம்.

பெண்களுக்கு ஸ்திரிதனம் கொடுக்கும் வழக்கம் இந்தியாவில் பல பாகங்களிலுமிருந்து வருகிறது. ஆனால் சென்னையில் இவ்வழக்கம் மிகுதி. பெற்றோர்கள் தங்கள் சக்திக்கு அதிகப்பட்ட ஸ்திரீதனத்தைக் கொடுத்தாலல்லது தம் பெண்களுக்கு வரன் கிடைக்காது கஷ்டப்படுவது எவ்வளவு துரதிர்ஷ்டமான விஷயம்? ஒரு மணத்தில் மிக முக்கியமாகத் தீர்மானிக்கப்படும் விஷயம் பெண்ணின் தகுதிகளும் குண விசேஷமுமன்று. ஆனால், ஸ்திரீதனந்தான். ஒரு மணத்திற் கிசைவதும் மறுப்பதும் பெண்ணின் பெற்றோர்கள் கொடுக்க இசைவதான ஸ்ரீதனத்தைப் பொருத்திருக்கின்றது. கற்றுத் தெளிந்தவர்களும் கூட இத்தீய வழக்கத்தை ஒழிக்காதது வருந்தத்தக்கதே. உண்மையிலேயே கற்ற பையன்கள் தம் கல்வியின் பொருட்டுச் செலவான தொகைக்கேற்ப ஸ்ரீதனம் பெறவேண்டுமென்று நாடுகிறார்கள். இதன் பயனாக, சாதாரண வருவாயுள்ளவர்கள் தம் பெண்களை மணஞ் செய்துகொடுக்க வேண்டியிருந்தால், அது பெரும் தாங்கமுடியாத கனமாகிவிடுகிறது. இந்த நிரந்தரக் கவலை காரணமாக அவர்களின் இனிய வாழ்க்கைக்கும் உடல் நலத்திற்கும் பங்கம் நேருகிறது. இத்தீய முறையை நிறுத்தி, ஆயிரக்கணக்கான, கோடிக்கணக்கான பெற்றோர்களின் கவலைகளை நீக்கவேண்டுமெனக் கோருவது மிகையாகுமா?

ஸ்ரீமதி நசீர் ஹிஸ் ஸேய்ன்.

# செல்வமும் வறுமையும்.

## செல்வச் செல்வியின் மயக்கும், வறுமை நங்கையின் நற்போதமும்.

(219-ம் பக்கத் தொடர்ச்சி.)



ஒரு நாட் போதில் 'வறுமை நங்கை' தன் ஆசை நாயகனை நோக்கிக் கூறியதாவது :— "கடவுள் எவர்கள் மீது அன்பாயிருக்கிறாரோ அவர்களிடம் என்னை அனுப்புகிறார்; கண்டிப்பும் கடூரமுமான என் சிக்ஷையினால் அவர்களை நல்வழியில் பயிற்றி, பின் வரும் மகிமையைப் பெறுவதற்கு அவர்களைத் தகுதியுள்ளவர்களாக்கி விடுவதும், இம்மைக்குரிய நியாயமான இன்பங்களை நியாயமானபடி அனுபவிக்கும்வாறு அவர்களுக்குக் கற்பிக்கொடுப்பதும் எனக்கு நியமிக்கப்பட்ட முக்கிய வேலை. பூர்வத்திலிருந்த மகாத்துமாக்களையும், பெரும் புலவர்களையும் நான்தான் ஸகல நற்காரியங்களிலும் பயிற்றி, மிக உன்னதமான நிலைமைகளுக்குக் கொண்டு வந்து, அவர்களுக்குப் பின்னுள்ள ஜனங்களுக்கெல்லாம் அவர்கள் நல்ல முன் மாதிரிகளும் வழிகாட்டிகளும் ஆகும்படி செய்தேன். என் ஸகோதரியாகிய 'செல்வம்' என்பவள் பார்வைக்கு மிகப்பகட்டும் சௌந்தரியமும் முக மலர்ச்சியுமுள்ளவளாகத் தோன்றினாலும் அவள் ஒரு வஞ்சகி; விசுவாச காதகி; தன்னை முற்றும் நம்பினோரை மோசத்திற்குட்படுத்தும் பெருந்துரோகி. அவள் முதலில் பலவித இன்பங்களைக் காட்டி மயக்கித் தன் வலையில் விழுந்து வசப்படுகிற ஜனங்களை ரவா நாநாவிதத் தீமைகளுக்கும் உட்படுத்தி, கடைசியில் தீராத ஸஞ்சலம் இக்கட்டுகள் ஆகிய இவற்றின் கையில் அவர்களைக் குரூரமாய் ஒப்புவித்துவிட்டு மற்றொரு ஆசை நாயகனோடும் ஓடிப்போவாள். ஆனால், 'வறுமை' என்னும் நாமதேயத்தை அணிந்திருக்கும் நானோ, என்னால் போதிக்கப்பட்டு, என் புத்திமதிகளை ஏற்றுக்கொண்டு அவற்றிற் கிசைந்தொழுகுவோர்களெல்லாரையும்— அனுபவ ஞானம் பழுத்தோர்களாக்கி, மனோரம்மியம், ஸந்தோஷம், சமாதானம் ஆகிய இவைகள் குடிகொண்டிருக்கும் பாக்கிய முன்ன நிலைமைகளுக்குக் தப்பாது நடாத்திக்கொண்டு போவேன்— என்பது சத்தியம்" என்று கூறினாள்.

ஃ

திர் அதிர்ஷ்டன் தன் ஸ்திரீயான 'வறுமை' நங்கையின் நற்போதனைகளுக்குச் செவிகொடுத்து, அவளுடைய விவேக நடத்துதலுக்குப் பூரணமாய்க் கீழ்ப்படிய உடன்

---

எவ்வளவோ நெருங்கிய நண்பர்களாயிருந்தாலும் ஒரு சிறு அல்ப சங்கதி அவர்களைப் பிரித்துக் கொடிய விரோதிகளாக்கி விடுகின்றது.

பட்டான். மனரம்மிய முள்ளவர்களுக்குக் குறைகள் கொஞ்சம்தான்; மனத்திருப்தி இல்லாதோர்க்குக் குறைகளோ எண்ணிறந்தவை; கடவுளுக்குக் குறைகள் ஒன்றுமில்லை; ஆகையால், மனரம்மிய முள்ளோர் மற்றவர்களைப் பார்க்கிலும் கடவுளுடைய தன்மைக்கு அதிகச் சமீபமாய் வருகிறர்கள் என்று ஓர் ஞானியானவர் விளம்பின முதுமொழியை வறுமை என்பவள் அடிக்கடி அவன் மனதில் நன்கு படுமாறு போதித்தாள். மேலும், அவள் அவனுக்கு முக்கியமாய்ச் சொல்லிய புத்திமதி என்னவென்றால் :—

ஃ

"ஒவ்வொருவனும் தனக்கு மேலான அந்தஸ்துக்களில் செல்வச் செருக்குள்ளவர்களாய் ஸகலவித ஸம்பிரமத்தோடும் வாழுகிற சொல்பத் தொகையான ஜனங்களை நோக்கிப் பார்த்துப் பெருமூச்செறிந்து பொறாமை கொள்ளாமல், தனக்குக் கீழே தாழ்ந்த நிலைமைகளில் எண்ணிறந்த ஜனங்கள் பலவித சங்கடங்களை அனுபவிப்பதைக் கூர்ந்து கவனித்து, மனரம்மியமும் நன்றியறிதலுமுள்ளவனாக வேண்டும். கடவுளிடத்தில் செய்யும் பிரார்த்தனைகளில் ஐசுவரியம்—தனம்—அதிகாரம் முதலியவற்றிற்காக மன்றாடாமல், தர்ம குணம், சமாதானமுள்ள நிலைமை, மாசற்ற வாழ்நாள், ஆறுதலும் ஸந்தோஷமுமான மரணம் ஆகிய இவற்றிற்காக ஆவலுடன் மன்றாடுவதே விவேகமாகும்"

ஃ

என்று அவனுக்குத் தெளிவாய்க் காட்டினள். அதன்பின் துர்அதிர்ஷ்டனும் தன் நிலையில் ஆறுதலும் சமாதானமும் அடையத் தலைக்கினன். ஆகிலும், 'வறுமை' என்பவளுடன் சகவாசம் செய்வது அவனுக்கு மனக் கசப்பாகவே இருந்தது. கடைசியாக, 'வறுமை' கூறிய புத்திமதியாவது:—

ஃ

அக்கினியானது பொன்னைப்புடமிட்டு, மாசு அகற்றி, மாற்றை உயர்த்துகிறதே; அப்படிப்போல், மனுமக்களின் மனதைச் சீர்திருத்தி அவர்களுக்கு விவேகத்தை அளித்து, அவர்களை நல்வழிகளில் பயிற்றும் பொருட்டாகவே வறுமையாகிய நான் தெய்வச்செயலினுல் மானிடரிடம் அனுப்பப்படுகிறேன். இந்நோக்கம் எப்போது நிறைவேறுகிறதோ அப்போது நான் வந்த வேலையும் முடிந்து போகும். உன்னிடத்திற்கு நான் வந்த காரியம் முடிந்து, நீயும் அனுபவ ஞானியாகி விட்டமையால் இனி உன்னை விட்டு நான் புறப்பட்டுவிட வேண்டியதே. உன் ஸகோதரனுகிய அதிர்ஷ்டன் பக்ஷத்தில் என் ஸகோதரியாகிய 'செல்வம்' என்பவள் ஆசைநாயகியாக வந்தாளே. நீ அவனுடைய மேன்மையான ஸ்திதியைப் பார்த்து மயங்கிப் பெருமூச்சு விட்டாயே. பணமுள்ளவனுக்குப் பசியால் பிறர் மெலியும் பாடு தெரியவாது; பிறர் தவிக்கும் தவிப்பையும் உணரமாட்டான்; தன் காரியத்தை மட்டும் கவனித்துக் கொண்டு, மற்றவனுக்கு என்ன கேடு நேர்ந்தாலும் அலக்ஷியமாயிருந்து விடுவான். ஒருவனுக்கு உதவி செய்கையிலும், அது வீண் தண்டத்திற்குச் செய்து தொலைப்பதாய் எண்ணி வெறுப்பு கொள்வான். இவ்வித தீயகுணங்களே கூடியவனுய் வெளியில் மட்டும் பெருஞ் செல்வன் எனப் பெயர்

கொண்டு விளங்குகையில், அவனது காரியங்கள் கடவுளுக்குப் பிடிக்காமற் போய்விட, அதனை பயனாகத் தெய்வசோதனை நேர்ந்து கொஞ்சகாலத்திற்குள் நாநாவித இக்கட்டுகட்கு உட்பட்டுத் தீராத ஸஞ்சலமுள்ளவனாய்க் கீழ் நிலையடைகிறான். இதை உன் ஸகோதரனுகிய "அதிர்ஷ்டன்"னிடம் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்திருப்பாய். "செல்வ"த்தின் மேல் மிதமிஞ்சின ஆசைவைத்த தன் மதியீனத்தையும், அதனால் தான் செய்த வஞ்சனைகளுக்குப் பதிலாகத் தனக்கு விளைந்த ஸன்னிறந்த கேடுகளையும் அவன் பிற்காலத்தில் உணர்ந்தான். அவனுக்கு உண்டாயிருந்த பலவித நிர்ப்பந்தங்கள், கடன் தொல்லைகள், துன்பங்கள் இவற்றினின்றும் நீங்குவதற்கு வேறுவழியற்றுப்போய், முடிவில் மரணம் தான் அவனை விடுதலையாக்கிற்று. உன் ஸகோதரனுடைய காரியம் இவ்வாறாக முடிய, நீயோ உன் பங்குக்கு 'வறுமை'யைப் பெற்றதினால் துன்பங்களில் நன்றாகப் புண்பட்டு நிதானமான வாழ்க்கையை நடத்துதற்கான திறமையுள்ள பாக்கியசாலியானாய். ஆகையால், நீ எப்போழுதும் 'வறுமை நங்கை'யாகிய என்னை உன் ஞாபகத்தில் வைத்து, நான் உனக்குப் போதித்ததும் நீ அனுபவவழியில் கண்டுணர்ந்ததுமான நற்புத்திகளைக் கவனித்து அவற்றிற்கிசைய ஒழுகுவாயாகில், உன் வாழ்நாட்கள் சமாதான சௌக்கிய முள்ளவைகளாயும், உன் மரணம் ஸந்தோஷமுள்ளதாயும் இருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை."

ஃ

என்றாள். இவ்வார்த்தைகளைச் சொல்லி முடித்த தக்ஷணமே, 'வறுமை' என்பவள் துர் அதிர்ஷ்டனைவிட்டுப் பிரிந்து மாயமாய் மறைந்துவிட்டாள். ஒருவனுடைய முயற்சியானது சோதனைகளிலிருந்தும் விலகி வெற்றி பெறுங்காலத்தில் "வறுமை"யும் அவனை விட்டு நீங்கி ஓடிவிடுவது எங்கும் நிகழ்வதேயாகும்.

ஃ

இதற்குப் பின்பு துர் அதிர்ஷ்டன் தன் வியாபாரத்தில் சிரத்தையாய் நிதானத்தோடும் நடத்தி வந்தான். நடுத்தரமான குடும்பமொன்றில் நன்கு கற்ற பெண்மணியொருத்தியை மணம் செய்துகொண்டு ஒரு நாட்டுப்புறத்தில் குடியேறி, அங்கு சிறிது நிலமும் வீடும் வாங்கி விபவசாயியாகவும் வியாபாரியாகவும் காலம் கழிப்பதானன். தனக்கு நிலையான சமாதானத்தையும் ஸந்தோஷத்தையும் வருவிக்கத்தக்க நல்ல எத்தனங்களைக் கைபாடுவதிலும், மற்றவர்கட்குத் தன்னால் கூடிய அளவு நன்மை செய்வதிலும் தன் காலத்தைச் செலவிட்டான். அவன் குடியிருந்த சிறு வீடு வீண் ஆடம்பரங்களற்றதாய் இராவிடினும், அது மிகவும் சுத்தமாயும் இன்பமுள்ளதாயுமிருந்தது. அவன் வீட்டு வாசற் கதவின்மேல் கீழேகண்ட வாக்கியத்தைப் பெரிய அக்ஷரங்களால் தெளிவாய் வரைந்திருந்தான். ஃ

சுயமரியாதை இபக்கத்தால் அதிகப்பிரஸங்கமாய் எல்லைமீறி நடந்து பாழ்பட்டுப்போன குடும்பங்கள் சிலவற்றின் பரிதாபம் பகரொணுது.

"இத்தாழ்மையான குடிசையில் மனரம்மியம், சத்தியம், சற்குணம், ஸந்தோஷம், சமாதானம், கடவுளே தன்னைக் காத்து வருகின்றாரென்ற பரிசுத்தமான நம்பிக்கை—ஆகிய இவைகள் ஒருமிக்க அந்நியோந்நிய ஐக்கியமாய் வாழுகின்றன. இங்கே செல்வத்தினுடைய நயவஞ்சகம், மோசம், ஏமாற்றுதல், சுயநல சிந்தை, நன்றியற்ற தன்மை—முதலிய தீய விஷ ஜெந்துக்கள் எதுவுமில்லை. ஆகையால் இப்பாக்கியமுள்ள இடத்தை ஒவ்வொருவனும் என்னைப்போல் பெற்றுக்கொள்ளக்கடவன். இந்த ஆநந்தமயமாயுள்ள சமாதான இல்லத்தின் பாக்கியத்தைக் காணும் ஒருவன் இதை அல்பமாக நினைத்து அவமதித்துத் தள்ளுவானாயின், உலகத்தில் எந்த ராஜஅரண்மனையிலும் இதிலுள்ள சிலாக்கியங்களை அவன் கண்டுபிடிக்கப்போவதில்லை மனோ சமாதானமும் சாந்தமுமான சிறு இல்லத்தின் வாழ்வுக்கு மிஞ்சிய செல்வம் உலகில் எங்குமில்லை. உற்றுப் பார்த்தால் உண்மை விளங்கும்."

ஃ

துர் அதிர்ஷ்டன் வெகு காலம் தன் மனையாளோடும் புத்திரர்களோடும் சுகமாயும் ஸந்தோஷமாயும் ஜீவித்திருந்து பூரண விருத்தாப்பிய வயதை இப்போது அடைந்திருக்கின்றான். அவனை வெகு ஜனங்கள் நேசித்துக் கௌரவித்து வருகிறார்கள். அவனது வறுமை வாழ்க்கை உலகத்திற்கு ஓர் நற்படிப்பினையாவதாக. இக்கதையிலிருந்து தெரிந்துகொண்ட கருத்துகளும், அநுபவங்களும் உலகத்திற்குப் பயன்படுமாக.



## கோபமும் வெந்நீரும்.

கொதிக்கும் வெந்நீரைப்போலவே கோபமும் மிக்க உஷ்ணமுடையது. கொதிப்பை அதிகப்படுத்துகிற அடுப்பினின்றும் வென்னீர்ப் பாத்திரத்தை இறக்கித் தூரவைத்துவிடின் சிறிதுநேரத்தில் கொதிப்படங்கிக் குளிர்ந்துபோம். அவ்விதமே, கோபமும் அது தோன்றிய இடத்திலிருந்து தூரவிலகி, வெளிச்சென்று சற்றுநேரம் இருப்பின் தானே தணிந்து கொதிப்பும் குறைந்துபோம் இவ்விதம் கோபத்தைத் தணித்து வாழவேண்டும் என்பதற்கே "ஆறுவது சினம்" என்று ஔவையார் கூறினார். வெந்நீர் பல ஔஷத முறைகளாக உபயோகிக்கப்படுவதுபோலவே, கோபமும் சிறிதளவாய்ப் பிரயோகிக்கப்படுமிடத்து, அதுவும் ஒரு உத்தமமான மருந்தாகி நற்பயன் நல்குகின்றது.

# * கதை எழுதுவது எப்படி?



இருநூறு மைல்களுக்கு அப்பாலுள்ள ஓர் நகரத்திற்கு ஒருவர் வழி தெரிவிக்கலாம். முதலில் அவ்வழிகள் சரிவர விளங்காதனவாகவும் இருக்கும். ஆயினும், அவ்வழி விவரங்களை மனதிற் பதித்துக்கொண்டு ஓயாது நடந்து சென்றவாறு இருப்பின், ஆங்காங்கு வழிகளும் தெளிவாக விளங்கி, இறுதியில் குறித்த நகரத்தைச் சேர்வதும் கூடும். அவ்விதமே, கதைகள் வரைவதற்கென்று இங்குதரும் குறிப்புகளும் உபயோகித்துக் கொள்வோருக்கு மட்டுமே பயன்படுவனவாகி, மற்றையோர்க்கு எட்டுச் சுரைக்காயாகவே முடியும். எதுவும் அவரவர் கைக்கொள்ளும் முயற்சியிலிருக்கின்றது.

ஃ

1. கதையை எப்படித் தயாரிப்பது?—கதையின் அளவு எவ்வளவு என்பதைக் குறித்துக்கொள். எந்தக் கதையிலும் ஒரு கருத்து விளங்க வேண்டும். கதையின் இடையே புகுத்தும் வேறு விஷயங்கள்—சட்டெனத்தோன்றி மறுபடியும் கதையைத் தொடர்ந்துகொள்ளும் வண்ணமாக—அமைத்திடுக. வாசிப்பவர்க்குச் சிக்கல்கள் உண்டாகாதபடி பார். முதற் பகுதிக் கதையை எப்படிப் பிரமிக்கும்படி மறைத்து எழுதுவதென்பதைப்பற்றி யோசி. கதையின் ஆரம்ப வாக்கியத்திலேயே கதையின் கருத்து அடங்கும்படி சாதுரியப் படுத்து. கற்பனையில் சக்தியைப் பழகு. நல்ல கற்பனைகளை எப்படிச் செய்வதென்பதற்கு உன் அனுபவ சம்பவங்களினின்றும், நூல் உணர்வினின்றும் ஆராய்ந்து எடு. வார்த்தைகளின் அர்த்த புஷ்டியில் கவனம்வை. உலகத்தைப்பற்றிய உன் ஆரம்ப அறிவையும், பிந்திய தேர்ச்சியையம் கதைக்குள் கோர்த்து ஒழுங்குபடுத்திச் சென்றால், இவை யாவும் கூடி ஒரு கதையாக உருவம் பெறும்.

ஃ

2. கற்பனையை எப்படி எழுதுவது?—கதை வரைவதற்கான எண்ணங்களை எவ்விதம் அடைவது? அது பல கதைகளைப் படித்தே வரவேண்டும். அந்த வாசிப்பில் பழகப்பழக எண்ணங்கள் தோன்றும். உண்மை அனுபவமும் கற்பனையும் அதே சிந்தனையுடனிருப்பின் எப்போதோ ஓர் சமயம் எதிர்பாராமலே கிடைக்கும். எப்புஸ்தகத்தையும் நீ உபயோகிக்கும் விதத்திற்குத் தக்கபடி உன் கதைக்கு விஷயங்கள் தானாக ஊறிச் சுரக்கும். ஆரம்ப அறிவிலிருந்து உண்டான மாதிரிக்கற்பனை ஒரு அணுவளவிலேயே இருப்பினும், நீ பக்குவப்படுத்துவதற் கேற்றவாறு அது சிலாக்கினையும் விரிவும் கொள்ளும். பிறகு கதாநாயகநாயகிகளை வாசகர்கள் திகைக்கும்படியான இடத்திற்குக் கொண்டுசென்ற பின்பு எப்படித் தொடர்ந்து எழுதுவதென்பதற்குச்

---

* பூர்ணமான உலகானுபவமும், கண்டும் கேட்டும் அறிந்துள்ளவைகளைப் பிறர் அறியும்படி எழுதி விளக்கக்கூடிய போராற்றலும், சளைக்காத ஊற்றைப் போன்ற கற்பனா சக்தியும் இயற்கையாய்ப் பெற்றோரே கதாசிரியர்களாகத் தக்கவராவர். எல்லோரும் கதாசிரியராகிவிட முடியாது.

சில நாட்களையோ வாரங்களையோ ஓய்வாக விட்டுவிடு. அதன் பின்பு உனக்கே ஒருவழி புலப்படும்; இருளும் பிறகு வெளிச்சமாகும். கதைக்கு வேண்டிய விஷயம் முதலில் கொஞ்சம்தான் கிடைக்கும். எழுதிச் செல்லுந்தோறும் அவை பெருகிச்சென்று அநேக பக்கங்களாவதற்கு வழிதரும். எழுதுவதற்குமுன்னர் சில சங்கதிகளையே நினைவிற் கொண்டிருந்தவன், எழுதிய பின்போ பல சங்கதிகளைக் கண்டறிந்து கதைக்குள் சேர்த்தவனாவான். கற்பனையும் இவ்வழியில் தானாகவே வந்து புகுந்துகொள்ளும்.

ஃ

3. சிறு கதையை எப்படிக் கட்டுவது?—சிறந்த முறையை அனுசரி. எதையும் சுருக்கமாக விவரித்துக் கூறு. எந்தக் கருத்தை நாம் கருதி எழுதவேண்டுமென்று நினைத்துக் கொள். கதாரம்பத்தின் முதல்வரியை ஸ்வாரஸ்மாக அமைக்கப் பார். கதா பாத்திரங்களின் குணங்களும் நடத்தைகளுமே சிறு கதைக்கு முக்கிய சங்கதி. அதிலேயே கதை வளர்ந்து முடிவுபெறவேண்டும். கதையில் பிரமிக்கச் செய்யுமிடத்தை நடுவிலும் கடைசியிலும் வை. கலவரம்—வேகம் கதை முற்றிலும் பரவி நிற்கட்டும். உன்னத நிலைக்கு வருவதையோ, அழிவையோ முடிவில் காட்டு. கதையின் கருத்தைக் கடைசியில் தெரிவி. ஆசிரியரும் வாசகரும் அடிக்கடி சந்திக்கும்படி செய். உனக்குத் தெரிந்த இரண்டு சம்பவங்களுடன் இன்னும் இரண்டு பொய்க் கற்பனைச் சம்பவங்களையும் ஜதைகூட்டி ஒழுங்குசெய்து சாரசங்கிரகமாய் அழகுபெற முடித்துவிடு. சிறுகதையே பெரிய கதை எழுதுவதற்கு முதல் அப்பியாசமாம்.

ஃ

4. கதாநாயக நாயகியை உயிருடன் இருப்பதுபோல் செய்வது:—மனிதர்களின் குணத்தை ஆராய்ந்து விளக்கு. சிறந்த கற்பனையின் வழியே கதையின் பாத்திரங்களை அவர்கள் உயிருடன் வாழ்வதுபோலவே வாசகர்கள் நம்பும்படி உண்மையில் கதை நடக்கும் விதமாகவே எழுது. சம்பாஷணைகளையும் காண்பித்து அதில் முக்கியமாக அவரவர் குணங்களை வெளிப்படுத்து. ஒழுக்கத்தால் வெளிப்படுத்துதல் ஒருவிதம்—துர் நடத்தையின் மூலம் வெளியிடுதல் மற்றொருவிதம். ஒவ்வொரு பாத்திரங்களுக்கும் படிப்பவர் அறியுமாறு விவரம் கொடு. பாத்திரங்களைத் தீயோராக்கும் முறையில் எழுதும்போது முடிவில் அதன் பலாபலனையும் தெரிவி. இரக்கத்தன்மையையும், கதா நிகழ்ச்சியின்போது சுற்றுப் பக்கங்களில் என்னென்ன நேரக் கூடுமோ அவற்றையும் கலந்துகொள்.

ஃ

5. சிறுகதை யொன்றைத் தனியாகக் கூறுபடுத்திப் பார்த்தல்.—தவறு வழியில் எழுதிய கதையா? அல்லவா? என்பதற்குக் கதாகற்பனையைப்பற்றி ஒரு குறிப்பு தயாரித்து விட்டு யோசி. தவறு வழியிலான கதையை எப்படித் திருத்தி எழுதுவது? கதையை அப்படியே வைத்துக் கொண்டு ஆங்காங்கு சில சில நீக்கிப்

---

பெண்கள் முன்னேறுவதைப்பற்றிப் பிரஸங்கிக்கிறார்கள். அவர்களுக்கு ஓட்டு சுதந்திரம் வந்து விட்டதென்கிறார்கள். இவை யனைத்தும் வெளி தடபுடல். உண்மையை நோக்கில் எவ்வளவோ பெண்கள் கணவனாலும், குடும்பத்துள்ளோராலும் அடிகளும் அவஸ்தைகளும் பட்டுக் கண்ணீர் விடுகிறார்கள். அடிமை மாடாகக் கிடந்து அழுகின்றார்கள்.

புதிய கற்பனைசேர்த்து, முடிவில் மறு படியும் முதலிலிருந்து வேறெரு கடிதத்தில் எழுதித் தயார்செய். எத்தனைமுறை திரும்பத் திரும்ப எழுதுகிருயோ அத்தனை முறைக்கும் அந்தக் கதை சுத்தமாக வடிகட்டியது போலாகும். கதையின் அமைப்பைப் பார்த்ததும் படிப்பவர் தெரிந்துகொண்டு விடும்படி எழுதாமல் மறைத்துச்செல். ஒவ்வொரு விஷயத்தையும் தனித்தனியே சோதித்துப் பார்த்து அது கதைக்கு வேண்டிய சரக்கு தானு—விரிவு அல்லவா—சுருக்கிவிடலாமா—என்பதையும் ஆலோசித்து ஒழுங்குசெய்.

ஃ

6. பலவிதமான கதைகள் எழுதுவது.—காதல்கதை, ஆபத்துகள் நிறைந்த கதை, பிரமிக்கும்படியான கதை, சாதாரண கதை, கட்டுக்கதை, குழந்தைகளுக்கான கதை, துப்பறியும் கதை, சரித்திர சம்பந்தமான கதை, சோகமான முடிவுள்ள கதை இப்படிப் பலவகை யுண்டு. தனிப்பட்ட கதையொன்றில் சிறந்தவனுகும் தேர்ச்சியை எவ்வாறு பெறுவதென்று யோசி. பலவித கதைகளும்-அதற்கான பாத்திரங்களை அமைக்கும் வழிகளும் நாளடைவில் தான் தெரிய முடியும். அது அனுபவத்தால் ஆகவேண்டிய காரியம்.

ஃ

7. ஹாஸ்யக்கதை எழுதுதல்.—மற்ற கதைகளைவிட இது தனிப்பட்டதோர் விஷயம். படிப்பவர்கள் சிரித்துவிடும்படி செய்வதற்குக் கற்பனை சுலபமானதாகவே இருக்கும். ஆனல், அதைத் தேரிந்து அமைப்பதுதான் கஷ்டமான வேலை. நாலு வரிக்குள் ஒரு சிரிப்பை யுண்டு பண்ணிவிடலாம். அதற்கு எழுதுவதின் சீர் எப்படியென்று சுருக்க வகையில் யோசி. எதைதை விட்டு விட்டுக் கதையைத் தொடங்குவதென்பதைக் கவனி. ஹாஸ்யமல்லாதவற்றை வளர்த்தாதே. உன் கற்பனையை அது ஹாஸ்யந்தானு என்று பரீக்ஷித்துப் பார். பிறருக்குச்சொல்லி அவர்கள் சிரிக்கிறார்களா என்று பார். நேர்த்தியானதொரு கற்பனையை இதில் அத்தாட்சியாகக் காட்டு. பாத்திரங்களை ரஸப்படும்படி எழுது. சொல்லும் முறை—நடையின் பிரதானம் இவ்விரண்டையும் கவனி. இலக்கண வழியிற் சொல்லாமல் உலக வழக்கமான சாதாரண பதங்களையே உபயோகி. கற்றுத்தேர்ந்த ஒரு அறிவாளியைவிட, ஒரு கல்லாத சாமான்னியன் வெகு எளிதில் பிறரைச் சிரிக்கச்செய்து விடுகின்றன்.

ஃ

8. விற்பனைக்கான கதைகள்—எழுத்துப் பிரதியை இரண்டு பிரதியாகச் சித்தப்படுத்தி அதில் ஒரு பிரதியை உன்னிடம் வைத்துக்கொள். ஒரே பக்கத்தில் எழுதித் தயாரித்திடு. விற்பனைக்குரிய வழிகளைச்சோதித்து உணர்ந்திடு. கதை முழுதும் எழுதிப் பதிப்பாசிரியரிடம் கொடுத்து விடாதே. பாதியோ, கால்பாகமோ, கொடுத்து முழுத்தொகையும் நீ பெற்றபின் மற்றதைக் கொடு. அதை அச்சிடுகையில் உன்பெயர் குறிப்பிடுவதைப் பற்றியும், உனக்கு இவ்வளவு பிரதிகள் வேண்டுமென்பதைப் பற்றியும் எழுத்துமூலமாகப் பெறு. பதிப்பாசிரியர்கள் தங்கள் காரியமான

---

தமிழுக்குள் ஸமஸ்கிருதம் உபயோகப்படுவதுபோல் ஸமஸ்கிருதத்தில் தமிழ் கலந்திருக்கவில்லை யாதலின், ஸமஸ்கிருதத்திற்குள்ள பெருமை ஒரு தனிப் பெருமையேதான்.

தும் ஆசிரியர்களை மறந்துவிடுவதே அதிகம். காபிரைட் பாத்தியதையை விற்பதைக்குறித்தும் யோசி. முதல் பதிப்பைமட்டும் விற்று மறுபதிப்புக் காபிரைட் பாத்தியதையை உன்னதாகக்கொள்ள விரும்பினால் அதற்கும் முதலிலேயே வழிதேடு. கதாசிரியனாகிய நீயே பதிப்பாசிரியனாகக் கூடாதாவென்று பார். கதைகளின் விலை 250-புஸ்தகங்கள் தனிப்பட கமிஷனில்லாமல் உன்னிடமே விற்றதும் அதற்கான செலவுகள் முழுதும் கிடைத்துவிடும்படி ஏற்படுத்து. எவ்விதமாய்க் கதைகளை விற்பது என்பதை மற்றவர்களைப் பார்த்து அறி. உன் கதைகளை மொத்தமாக விற்கக் கொடுக்குமிடங்களில் அதற்கு அத்தாட்சி பெற்றுக்கொண்டு கொடு. ஒழுங்காக விற்றுப் பணத்தைத் தரும் நாணய யோக்கியமான இடங்கள் சிலதான் உண்டு. விற்கக் கொடுத்த இடத்தில் பணம் பெறாமலே காலஞ் சென்றுவிட்ட ஆசிரியர்களும், ஏமாறியும் மோசம்போயுமுள்ள ஆசிரியர்களும் எண்ணிலர்.

ஃ

9. நீ எழுதியதையே எப்படிக் குற்றம் காண்பது?—முதன் முறை திரும்பவும் படித்தல்—இரண்டாம் முறை திரும்பப் படித்தல்—கடைசி முறை திரும்பிப்படித்தல்—எந்தத் தப்பிதத்தை-உன் மனதுக்குக்கோணலாய்ப் படுகின்றதைப்-பார்க்கவேண்டுமென்று கவனித்தல்—பிறகு அதைச் சரிப்படுத்தல்—ஏற்கெனவே மேதாவிகளாயுள்ள கதாசிரியர்களிடம் உன் கதையை அனுப்புதல்—அவர்கள் எடுத்துக்காட்டும் பிழைகளைத் திருத்துதல்—அவர்களிடமே சில புது கற்பனைகளைச் சேகரித்தல்—உன் வீட்டில் உள்ளவர்களுக்கு அந்தக் கதையைச் சுருக்கமாகச் சொல்லிப்பார்த்து ருசிக்கிறதாவென்று சோதித்தல். இம்முறையில் பலகாலும் ஆராய்வதுடன், ஒரு கதையை எழுதிய பின்பு ஒரு ஆறுமாதம்வரைப் பெட்டியில் வைத்துவிட்டு அதைப்பற்றி யோசித்தவாறாகவே இருந்தால் புதுபுது கற்பனைகள் கிடைத்து இன்னும் கதையை நன்கு திருத்தி அழகுபடுத்த முடியும்.

ஃ

10. நாவலும் தொடர்ச்சியாக எழுதுதலும்.—கதை என்பது ஆரம்பமுதல் இறுதிவரை கூறுவது. நாவல் என்பது நடுவிலோர் சம்பவத்திலிருந்து தொடங்கி முன்னும் பின்னுமுள்ளவற்றை இடையிலும் கடைசியிலும் விவரித்து முடிவக்கு வருதல். சிறுகதை எழுதப் பழகிய பின்னர்தான் தொடர்ச்சிக் கதை எழுதப் பக்குவம் பெறவேண்டும், தொடர்ச்சிக் கதை என்பது ஒரு கதையை எழுதி முடித்தபின், அதே சாயலில் மற்றொரு கதை இயற்றுவதாகும். கதா பாத்திரங்கள்—மறைபொருள்கள் இவற்றை வெகு நுட்பமாகக் குறிப்பிடவேண்டும். உண்மையில் நாவல் என்பது என்ன? இயற்கையில் நடந்ததுபோன்று அமைத்தலே நாவலாகும். படிப்பவர்களுக்குப் பிடித்த முறையில், அவர்களின் ஆவலை வளர்க்கும் வகையில் கற்பனைச் சரக்கு அதிகமாகச் சேரவேண்டும். ஒரு விஷயத்தைத் தெரிவிப்பதற்கு ஒன்பது பக்கம் போய்விடக் கூடாது. படிப்போரும் அந்த ஒன்ப

---

அழுக்கு வேஷ்டியை அவசரத்தில் சுத்தம் செய்வதெப்படி?—துவைத்தா?—வண்ணானுக்குப் போட்டா? அல்ல, அல்ல; அந்த வேஷ்டியைத் திருப்பிக் கட்டிக்கொண்டால் அதின் அழுக்கு உட்பக்கம் மறைந்து சுத்தமான வேஷ்டி போலாகிவிடுமாம்.

தில் எட்டுப் பக்கங்களைத் தள்ளி விட்டே வாசிப்பர்.

ஃ

**11. ஒரு பிரபல ஆசிரியரின் கதை அமைப்பு:**—முதல் அத்தியாயத்திலேயே 300-பக்கக் கதாபாத்திரங்களின் பெயர்களோ—அவற்றிற்கான குறிப்புகளோ—பிந்திய கதா ஸம்பவங்களின் ஜாடைகளோ யாவும் அடங்கிவிடவேண்டும். இந்த வகையில் முதல் அத்தியாயம் ஒரு 30, 20-பக்கம்போல் சாரசங்கிரகமாக அமைய வேண்டும். முதல் அத்தியாயத்தில் வராத பாத்திரங்கள், அதன் சார்புகள் பிறகு மற்ற அத்தியாயத்தில் வர வொண்ணாது. பிற்பட்ட அத்தியாயங்கள் முதல் அத்தியாயத்தை விளக்கச் செல்வதற்குத் துணையானவைகளாக மட்டும் இருக்கவேண்டும். கற்பனையே அதிகமாக நிறைந்து, விரிவு இன்றி, சுருக்கமாகவும், எளிய பதங்களுடன் கூடிய வாசகமாகவும் அமைக்கவேண்டும். இவ்விதமாக 200, 300-பக்கங்களில் முடிவு செய்ய வேண்டும். ஒன்றுக்குப் போனான் என்பதற்கு ஒரு அத்தியாயமும், முகம் கழுவினான் என்பதற்கு ஒரு அத்தியாயமும், இருவரும் சந்தித்துப் பேசினர் என்பதற்கு ஒரு அத்தியாயமுமாக எழுதினால் அந்தக் கதை ருசிக்காது. ஒரு அத்தியாயத்தில் அநேக சங்கதிகளைச் சேர்த்துக் கற்பனையாக்குவதே ஸமத்காரமாகக் கதை எழுதும் வழியாகும். இன்னுமொரு கதை எழுதி விடுக்காரோ என்று எதிர்நோக்கி விரும்பும்வாறு கதை அமைக்கும் திறன் இருக்க வேண்டும்.

---

## உண்மையான அதிதியின் இலக்ஷணங்கள்.

அவன் ஊரைவிட்டு ஊர் வந்தவனாயிருக்கவேண்டும் தன் குடும்பத்திற்குச் செய்யவேண்டிய கடமையில் கடவுளை நம்பியவனாய் சத்திய நெறியில் நடப்பவனாக இருக்கவேண்டும். வேறு தங்குவதற்கு இடனற்று நமது வீட்டையே நாடியவனாய் இருக்கவேண்டும். தன்னாலானவரை உலகத்திற்கும் பாடுபடும் தூய மனதுடையவனாய் இருக்கவேண்டும். என்றைக்கும், உண்மையும் உறுதிப்பிடியும், உழைப்பும் கொண்டவனாயிருக்கவேண்டும். நன்றி விஸ்வாசமும் உத்தம ஹிருதயமும் படைத்திருக்கவேண்டும். இத்தகையோனை நம் வீட்டில் வரவேற்று உபசரித்து அவனுக்கு சமய சகாயம் செய்தால்——அது கடவுளுக்குச் செய்ததுபோலவே ஆகும். அது இறைவனார்வரை எட்டும் தர்மமுமாகும். பாத்திரமறிந்து இட்ட பிச்சையுமாகும்.

அனாவசியமாய்த் திடீரெனக் கோபம் கொள்வோருடன் நெருங்கிப் பழகுவதும் நட்பு பிடிப்பதும் நெருப்புடன் குளிர் காய்வதற்குச் சமமே. சற்று பிசகினால் அந்த நெருப்பே சுட்டு விடுமன்றோ?




# இராஜசந்திரன்



(292-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XIII.

கண்ணப்பன் :—என் இராஜ சந்திரா! என்னைப் பேதமாக நினைக்காதே. இந்த நிமிஷ முதல் உன் இஷ்டப்படி நடக்கும் அடிமையென்று எண்ணிக்கொள். உனக்காக என் சொத்துக்களை யெல்லாம் இழக்க நேர்ந்தாலும், அவ்வளவுக்கும் செலவிட்டுக் குற்றவாளியை எவ்விதமும் கண்டு பிடிப்பது நிச்சயம். நீ எதற்காகவோ திகில் பட்டதாகவும், அதனாலேயே ஜ்வரம் வந்ததாகவும் சொன்னாய். அதென்ன?

இராஜ சந்திரன் :—இன்றைக்கு இருபத்தைந்து தினங்களுக்கு முன்பு நான் சுரங்கத்தில் வேலை செய்து கொண்டிருக்கையில், ஓர் அழகிய யுவா புருஷன் லாவண்யமயியான ஒரு சுந்தரியுடன் சுரங்கத்திலிருப்பனவற்றை யெல்லாம் வேடிக்கை பார்க்கவந்து ஒவ்வொன்றையும் கண்டு களித்தபடியே சென்றான். என்னையும் கூர்மையாகக் கவனித்ததால் நானும் அவனைச் சிரத்தையோடும் உற்றுப் பார்க்க நேர்ந்தது. ஆ! என்ன சொல்வேன்! அவன்தான் நான் கூறிய தங்கவேலு.

கண்ணப்பன் :—நீ தேடிக்கொண்டிருக்கும் தங்கவேலா? ஆச்சரியமே! அதன் பிறகு என்ன செய்தாய்?

இராஜ சந்திரன் :—அவன் ஏறி வந்த வண்டியின் அருகிற்சென்று, அவனைப்பற்றி வண்டிக்காரனை விசாரித்ததில், பௌரிங்குப்பேட்டை பஜார் வீதியில் மோஹன விலாஸம் என்ற வீட்டிலிருந்தும் தான் வண்டியோட்டி வந்ததாகச் சொன்னான். பிறகு அன்றுமாலையில் நான் பௌரிங்குப் பேட்டைக்குச் சென்று மோஹன விலாஸத்திற்கு அருகில் உலாவிக் கொண்டிருக்கையில், அச்சமயம் தங்கவேலு வெளியில் செல்வதற்குப் புறப்படுவதை யறிந்து அவனைப் பின் தொடர்ந்தேன். அவன் நேராக ஒரு போலீஸ் சேவகனிடம் சென்று குசு குசுவெனப் பேசி என்னைச் சுட்டிக் காண்பித்தான். நான் மிக்க அச்சத்துடன் கம்பி நீட்டி விட்டேன். மறுபடியும் இரண்டு தினங்கட்குப் பிறகு மோஹன விலாஸத்துக்குச் சென்று உலாவிக் கொண்டிருக்கையில், தங்கவேலு அங்கு எதிர்ப்பட்டு என்னை நோக்கி, "என்ன காரணத்திற்காக அடிக்கடி இங்குவந்து என்னை முறைத்துப் பார்க்கிறாய்?" என்றான். நான் பதில் சொல்லாதிருக்கவே, "இனிமேல் இம்மாதிரி செய்தால் உன்னைப் போலீஸாரிடம் பிடித்துக் கொடுத்து விடுவேன்" என்றான். நான் கோபத்துடன் "நீ யோசியாமற்

பேசுகிருய்; மனிதர்களை முறைத்துப் பார்த்ததற்காகப் போலீஸார் என்னைத் தண்டித்துவிட மாட்டார்கள்" என்றேன். அதற்கு அவன் "உனக்கென்னவே கிரகசாரம் பிடித்துக் கொண்டிருக்கிறது" என்று கூறியபடியே சென்று விட்டான். அவன் போலீஸாருக்கு என்னைப்பற்றி ஏதோ தெரிவித்திருக்கிறது போல் தோன்றுகிறது. ஏனெனில், நான் வீதி வழியாக அதற்கு மறுநாள் போய்க் கொண்டிருக்கையில் ஒரு போலீஸ் சேவகன் என்னைக் கூர்மையாய்க் கவனிக்கலானுன். நான் பயமும் நடுக்கமுமாய்த் தப்பித்துக் கொண்டு ஓடி விட்டேன். அன்று முதல் எங்கும் தைரியமாய் வெளியிற் செல்வதில்லை. என்னை எவ்விதமும் பிடித்து விடுவார்களென்று நடு நடுங்கிப்போய் வீட்டதில் குளிர் ஜ்வரமும் அன்றே எனக்கு வந்து விட்டது. இந்த சங்கதிகளை உனக்குத் தெரிவிக்கவே இங்கு வந்தேன்.

கண்பப்பன் :—இனி முன்போல் அதிகமாக வெளியில் வராதே. பௌரிங்குப்பேட்டைக்கும் போகாதே. ஏனெனில், உன்னை மாறுவேடத்துடன் பார்த்ததாக அநேகர் கூறியது என் செவிக்கும் எட்டி யிருக்கிறது.

இராஜ சந்திரன் :—அப்படியா சங்கதி. இனி வெளியில் வரவே மாட்டேன். செலவுக்கு இல்லாததால் ஐம்பது ரூபாய் எனக்கு நீ கொடுக்க வேண்டும்.

கண்ணப்பன் :–வேண்டிய பணம் தருகிறேன். அன்றையதினம் ஒரு வண்டியில் தங்கவேலுவைப் பார்த்ததாகக் கூறினுயல்லவா? அது என் வண்டி தான்.

இராஜ சந்திரன் :–உன் வண்டியா? உள்ளே உட்கார்ந்திருந்த பெண் யாரா யிருக்கலாம்?

கண்ணப்பன் :—அது கமலவல்லியே. நீ தங்கவேலுவைப் பற்றி முன்பு அடையாளங்கள் சொல்லுகையில், கமலவல்லி அவனுக்கு உச்சிக் குடுமி முடிபோட முடியாதபடி அவ்வளவு சிறியதாயிருக்குமா என்று கேட்டாளல்லவா? கமலம் ஊகித்தது சரியாய் விட்டது. தங்கவேலுவை நான் எவ்விதமும் கண்டு பிடித்து விடுகிறேன். உனக்கு அந்தக் கவலை வேண்டாம்.

இராஜ சந்திரன் :–கமலாவா அந்த வண்டிகுள் இருந்தாள்? ஆச்சரியமே. அவ்வாருயின், குற்றவாளியான தங்கவேலுவை நீ நன்ருக அறிந்திருக்கிருய்போலுங் காண்கிறது.

கண்ணப்பன் :—ஏற்கெனவே கமலாவும் நானும் இவை [illegible] பேசியிருக்கிறோம். கமலா [illegible] போகாதிருந்தால் என் மூளை [illegible] பொழுதே வெகு சுறுசுறுப்பாக வேலை செய்திருக்கும். இப்போதும் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. எவ்விதம் தங்கவேலுவின் மீது வலை வீசுவதென்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

ஃ

இந்த சமயத்தில் மூடியிருந்த கதவைத் திறந்துகொண்டு ஒருவர் உள்ளே வரவும், அவரைக் கண்டதும் இராஜ சந்திரன் பயந்து அங்கிருந்த பீரோவுக்குப் பின்புறத்தில் ஒளிந்து கொண்டான். கண்ணப்பன் வியப்புடன் அவருக்கு ஒரு நாற்காலியைப்

---

எவ்வளவு பலத்த எதிர்ப்புகளிருப்பினும் சமயோசிதமாய் நடந்து காரிய வெற்றி காண்பவனே வீரனுவான்.

போட்டு உட்காரச் செய்தான். வந்தவர் ஸ்ரீநிவாச முதலியாராவர்.

கண்ணப்பன் :—இவ்வளவு அவசரமாக இந்த இராத்திரியில் எங்கு வந்தீர்கள்?

ஸ்ரீநிவாச முதலியார் :—இவ்வூரில் பல அற்புதங்கள் நடக்கின்றன. போலீஸார் ஒரு காசுக்கும் உபயோகமில்லை.

கண்ணப்பன் :—என்?—ஏன்?

ஸ்ரீநிவாச முதலியார் :—அவர்கள் எவ்வளவு முயற்சி செய்தும், அக்கொடிய துஷ்டனைப் பிடிக்காதது பெரிய அவமானம்.

கண்ணப்பன் :—எந்தக் கொடிய துஷ்டனை?

ஸ்ரீநிவாச முதலியார் :—என் பேரைக் கெடுக்கப் பிறந்த பிள்ளையாகிய அந்த இராஜ சந்திரன்தான்.

கண்ணப்பன் :—அவன்தான் இரங்கூனுக்கு ஓடி இறந்துபோய் அநேக வருடங்களாய் விட்டனவே?

ஸ்ரீநிவாசமுதலியார் :—அதுபொய். இங்கேயே அவன் திரிந்து கொண்டிருப்பதாகப் பலர் சொல்லுகிறார்கள். அவனைப் போலீஸில் பிடித்துக் கொடுக்காத வரையில் எனக்கு நல்ல பேர் ஏற்படாது.

கண்ணப்பன் :—நல்ல பேர் ஏற்பட்டால் ஏதாவது திவான் பகதூர் பட்டம் கிடைக்குமென்று கனவு காண்கிறீர்களா? அவன் உங்கள் குமாரனல்லவா? அவனிடம் இரக்கம் காண்பிக்கக் கூடாதா?

ஸ்ரீநிவாச முதலியார் :—அந்தத் துஷ்டன் என் பெயரைக் கெடுத்து விட்டான். அவன் இங்கு உன்னிடம் அடிக்கடி வருவதாக இக்கடிதத்தில் கண்டிருந்ததால் உடனே உன்னிடம் வந்தேன்.

ஃ

கண்ணப்பன் அக்கடிதத்தை வாங்கிப் பார்த்து அதிற்கண்ட எழுத்துகள் இன்னாருடைய தென்பலதை நன்கறிந்தவனாய்த் தனக்கு உண்டான ஆச்சரியத்தை அடக்கிக்கொண்டு, இக்கடிதத்தில் கையொப்ப மில்லாததால், இது பொய்க்கடிதமென்றும், இவ்வித கடிதங்களைக் குப்பைத் தொட்டியில்தான் போடவேண்டு மென்றும், இராஜசந்திரனைத் தான் கண்டதேயில்லை யென்றும், தன்னைத் தப்பிதமாக ஸந்தேகிப்பது சரியல்ல வென்றும் கூறினான். இதைக் கேட்ட ஸ்ரீநிவாச முதலியார் ஏமாற்றத்துடன் கண்ணப்பனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றார்.

ஃ

அவர் சென்றதும், கண்ணப்பன் இராஜ சந்திரனை வெளியில் வருமாறு அழைத்து, அவர் போய்விட்டார், பயப்படாதே என்றான். இராஜ சந்திரனும் அச்சத்துடன் வெளியில் வந்தான்.

இராஜ சந்திரன் :—அக்கடிதம் யார் எழுதி யிருக்கலாம்?

கண்ணப்பன் :—அந்தப் பயல்தான் தங்கவேலு எழுதியது. அவன் எழுத்துகள் எனக்கு நன்றாகத் தெரியும். உன்னை அடியோடும் கெடுக்க அவன்

---

நமக்கு வெகு உபகாரிபோலவும் இருந்துகொண்டு, இன்னோரிடத்தில் நமக்கு வரக்கூடிய பணத்தை வராமலும் ரகசியத்தில் கெடுத்து விட்டு, மேலுக்கு நம்மோடு குலாவவும் வருகிறான். நாம் அதைப் பிறகு அறிந்துகொண்டாலும், அறியாத பாவனையிலிருந்து விடுவதே சாமர்த்தியமாகும்.

வழி தேடுகிறான். நீ வேலை செய்கிற சாங்கத்திற்கும் அவன் வந்து போயிருப்பதால், இனி நீ அங்கு வேலைக்குப் போகக் கூடாது. நான் உன் செலவுகளுக்குப் பணம் அனுப்பிவருகிறேன். வீட்டிற்குள்ளேயே யிரு.

இராஜ சந்திரன் :—இவ்வூரிலிருந்தால் என்னை எவ்விதமும் பிடித்து விடுவார்கள். என் தேகத்தில் சற்று பலமுண்டானதும் சிங்கப்பூர் பினாங்குக்கு ஓடிவிட நினைக்கிறேன்.

கண்ணப்பன் :—நீ சுத்தப் பைத்தியக்காரன். தங்கவேலு உன்னைப் பிடித்துக் கொள்ளும்படி போலீஸாருக்குத் தெரிவிக்க மாட்டான். உன்னைப்பிடித்தால் நீ அவனைக் காட்டிக்கொடுத்து விடுவாயானதால் அவனே நேராக இவ்வேலையைச் செய்ய மாட்டான். உன்னை இவ்வூரை விட்டுத் துரத்த எண்ணி உன்னைப் பயப்படுத்துவதற்காகப் போலீஸுக்கு மொட்டைக்கடிதங்கள் எழுதியிருக்கலாம். இது தெரியாமல் நீ பயப்பட்டு ஓடி விடுகிறதா? நீ ஓடிவிடுவதில் தங்கவேலுக்கு நன்மையையே செய்தவனாவாய். இனி அந்த எண்ணமே கொள்ளாதே. உனக்கு இன்னொரு விஷயம் தெரிவிக்கிறேன். உன் பழய காதலி அபிராமி என்னைக் காண இங்கு வந்திருந்தாள். அவள் தமக்கை ஜானகி என்னிடம் வேலையாளாக இருப்பதால், அவளைப்பார்க்க வந்தபோது என்னையும் கண்டு கொண்டாள்.

இராஜ சந்திரன் :—அபிராமி இங்கு வந்திருந்தாளா? ஆச்சரியமே. அவளை முன்பு எவ்வளவு காதலித்தேனோ அவ்வளவுக்கும் இப்பொழுது வெறுக்கிறேன். அவளிடம் காதல் கொள்ளப் போய் தான் இந்தக் கதியானேன். என்ன துர்க்கதி யடைந்தாலும் சில புருஷர்களுக்குப் பழய காதலியிடம் வைத்த வாஞ்சையை மறக்க முடிகிறதில்லை. அது போலவே எனக்கும் அவள் சங்கதிகளைப்பற்றித் கேட்க ஆவல் அதிகமாகிறது. இப்போது அவள் எப்படியிருக்கிறாள்?

கண்ணப்பன் :—அவளுக்கு விவாகமாகி விட்டது. ஒரு செல்வவதியாயாகவே என் கண் முன்பு தோன்றினாள். நீ அவளைப் பிரீதிக்கிறாயேயன்றி, அவளுக்கு உன்மீது கடுகத்தனையும் அன்பு இல்லை. அதற்குப் பதிலாக உன்மீது அதிக துவேஷம் கொண்டிருக்கிறாள். தங்கவேலு தன் தந்தையைக் கொல்லவில்லை யென்றும், நீயேதான் கொன்றவனென்றும் அவள் நிச்சயமாய்க் கூறுகிறாள்.

இராஜ சந்திரன் :—அது நம்பத் தக்கதல்ல.

கண்ணப்பன் :—தங்கவேலு கொலை செய்யும் பொழுது நீ கண்ணால் பார்க்கவில்லையாதலால் உனக்கு எப்படித் தெரியும்?

இராஜ சந்திரன் :—அவன் கொலை செய்யாமலிருந்தால் அன்றைய இரவு குண்டின் சப்தம் கேட்டதற்குப் பிறகு உடனே ஸைகிளில் ஏறி வேகமாய் ஓடிவிட வேண்டிய காரணமென்ன?

கண்ணப்பன் :—கொலை நடந்த போது அவன் அபிராமியிடம் வெளியில் பேசிக்கொண்டிருந்தானாமே?

இராஜ சந்திரன் :—அது சுத்தப் பொய். அப்படியாயின், விசாரணைக் காலத்தில், கொலை நடந்தபோது தான் தனியாகத் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்ததாயும், கொலையைப் பற்றித் தனக்கொன்றும் தெரியாதென்றும், சப்தம் கேட்டதும் ஓடிப் பார்க்கையில் நான் என் துப்பாக்கியுடன் இருந்ததைக் கண்டதாகவும் அபிராமி கூறி யிருக்கிறாளல்லவா? அப்படியிருக்க, அச்சமயம் தான் தங்கவேலுடன்பேசிக்கொண்டிருந்ததாக இப்போதுகூறுவது நம்புவதற்கு ஏற்றதல்ல. (தொடரும்.) S. G. R.

# மனோசாந்திக்கு வழி எது?

(புகழ் அடைவதிலுள்ள சிக்கல்களின் தொடர்ச்சி.)



ஆர்வத்துடனும் எதிர்நோக்கும் புகழ்ச்சியை எளிதில் அடைய முடியாதென்றும், அது விரைவினில் அழிந்து படுவதாமென்றும், அந்தப் புகழ்ச்சியைப்பெற விருப்பம் கொண்டோனுக்கு அது மிகச் சிறிய அளவுக்கேதான் இன்பம் பயப்பதாமென்றும், அதனால் அதைப் பெற நாடியவன் மனோ நிம்மதியின்றிப் பெரிதும் கஷ்டப்பட வேண்டியதாயிருக்கிறதென்றும் சென்ற ஸஞ்சிகையில் விவரித்தோம். அதற்கு ஒரு சிறு முடிவும் அங்கு கூறினோம். அதனை இங்கு விரிவாக விளக்குவோம்.

ஃ

புகழானது கடைசியில் ஒரு முடிவை நமக்குக் காட்டாமல் கஷ்டத்திலும் மனோ ஸஞ்சலத்திலுமே நம்மை இழுத்துக்கொண்டு போவதாயிருப்பினும், அப்புகழை அடைய வேண்டியது ஒவ்வொருவனுடையவும் கடமையாகின்றது. பொதுவாக, எல்லோரும் மறு உலகத்தில் இறைவனர் தம் திருவடி நீழலில் குதூகலமாகக் காலங்கழிக்க வேண்டுமென்ற விருப்பமே மிகுதியுங்கொண்டோராவர். புகழை அடைய மிக மிக விரும்பி அதற்காகப் பாடுபட்டவர்கள் அம்மறு உலகினில் கீழ் குறிப்பிடும் மூன்று காரணங்களால் பூரண இன்பம் அனுபவிக்க இயலாதோராயுள்ளார்.

முதலாவதாக—புகழை யடைய ஆசித்தோரின் மனதில் தீய எண்ணங்களே குடிபுகக் காரணம் இருக்கிறது.

இரண்டாவதாக—புகழை யடைவதற்கு அவர்கள் செய்யும் வேலை பிறருடைய மனத்தைப் புண்படுத்தி நோகப் பண்ணுவதாயுளது.

மூன்றவதாக-இன்னொருவருடைய மனத்தை வேதனைபடச் செய்து அதன் வழியாகவே தமக்குப் புகழையும் ஸந்தோஷத்தையும் பெற விரும்புவோர் ஒருக்காலும் உண்மைப் புகழினை அடையார்; மறுவுலகினில் குதூகலத்தையும் அன்னோர் அனுபவியார்.

ஃ

எனவே, நாம் இனி செய்வது யாது? இவ்வுலகத்தின் புகழை மட்டுமே விரும்பி, நிலையற்ற அதனை மாத்திரமே தேடியுழல்வது மௌடீகமாமென்றும், அதைவிட, எல்லோருக்கும் மேலானவராகப் பிரகாசிக்கும் சர்வக்ஞனுடைய மனதில் நாம் பரிசுத்தனென்று தோற்றுவித்து அவருடைய உதவியினை (அருளை) நாடி மறுவுலகினில் ஸந்தோஷமாகக் காலங்கழித்தற்சேற்றவாறு ஒழுகுவதே உசிதமாமென்றும் முடிவு கூறலாம்.

ஃ

முதலாவது, நம்முடைய பரிசுத்தத்தை ஸர்வேச்வரனொருவர் தவிர, வேறு எவரானும் நிதானிக்கவும் கண்டுகொள்ளவும் முடியாது. நாம் எவ்வளவுக்கு மாசற்றவர்களென்பதை

---

எவர் ஒருவர் எந்த சங்கதியையும் தன்னைப்பற்றியே எழுதியதாகக் கருதுகிறாரோ, அவர் திட்டமாய் அவ்விஷயம் செய்தவராயிருப்பார்.

யும், மனஸ்பூர்வமாகவே மற்றவர்கட்கு உழைத்துப் பாடுகள் தாங்கி வந்திருக்கிறே மென்பதையும், இப்போது நன்றி கெட்டவர்கள் அற்றும் அபாண்டமான விஷப்பொய்ச் சொற்கள் தர்ம நியாயத்திற்கு அடாதவைகளென்பதையும் இறைவன் ஒருவரே உணரவல்லார். நமது பரிசுத்தத்திற்குத் தகுந்தாற்போல் நமக்கு மதிப்பு கொடுத்து ஆதரிக்கவும் அந்த எம்பெருமானே தக்கவர். கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட மானிடவர்க்கத்துக்கு மற்றொருவரின் நற்குணங்களைச் செய்கைகளிலிருந்தும், குணுதிசயங்களிலிருந்தும், அவர்களின் மேற்பூச்சான வெளித்தோற்றத்திலிருந்தும் அன்றேனா நிதானிக்கத் தெரியுமே யொழிய, உள்ளத்துள்ளே புகுந்து ஆராய்ந்து உண்மை கண்டு உரைக்க இயலா. மூத்த குழந்தையிடத்துத்தான் அதிக பிரியமென்றும், இளைய குழந்தையை அவ்வளவாகக் கவனிப்பதில்லை யென்றும் ஒரு நங்கை தன் நாயகனை நோக்கிக் குறை பேசுகின்றுள். அவ்விரு குழந்தைகளிடத்தும் ஒரே விதமான பிரீதியை அவன் கொண்டிருப்பதைப் பகவான் ஒருவரே உணர்ந்தவராவார். தீயோ னென்றும், துரோகி யென்றும், வஞ்சகனென்றும், ஆதரியாதவனென்றும் மற்றவர் கூற, அங்ஙனம் பழிக்கப்பட்டோனின் உள்ளத் தூய்மையையும், அவன் நன்றி விசுவாசத்துடனே நடந்து வந்திருக்கும் உயர்வையும் கடவுள் தெரிந்து வைத்திருக்கிறார். இவ்விதமே உத்தமர்களாகக் காண்பித்துக் கொள்வோரின் கபடத்தன்மையையும், அவர்களின் மோசத்தையும், பொய்யையும் ஈசன் உணராமலில்லை. முடிவில் அவரவர்களின் குணத்திற்குத் தகுந்த யோக்கியதையிலேயே அவரவர்களையும் வைக்கின்ருர். கபடமனத்தோனை யாவுமே திடீரென்று இழக்கவைத்து வெறுங்கையனுக்குகிறுர். உத்தமனுக்கோ நாலா திசைகளிலிருந்தும் உதவிகள் கிடைக்கச் செய்து நன்னிலையில் இருத்தி வாழ்விக்கின்ருர். இது உலகு தோன்றிய நாள்முதலாகக் கண்டுவரும் நிலை—காட்சி.

ஃ

பொதுவாகவே, மானிடவர்க்கம் ஒருவனுடைய உள் உண்மைகளையும், உள் எண்ணங்களையும் அறிந்து நிதானிக்கச் சிறிதும் சக்தி யில்லாதிருக்கின்றது. வெளியில் காட்டிக் கொள்ளாமல் மனதிலேயே நிறைத்து வைத்துக்கொண்டு விர்த்தி செய்யும் எத்தனையோ நற்குணங்கள் இருக்கின்றன. பெரும் புகழ் அடைந்தோரிற் சிலரது ஹிருதயங்களில் பொதிந்து கிடக்கும் நற்குணங்கள் வெளிக்குத் தோன்றவே தோன்ருது. அன்னேர் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ள விரும்புவதுமில்லை. ஆனல், அவைகள் அவர்களின் இருதயகமலங்களில் நுழைந்து பரிசுத்தமனதுடன் ஆராய்ச்சி செய்பவருக்கே தெரியவரும். அவ்விதமாக அவர்களின் மனதிலிருக்கும் நற்குணங்கள் ஒருகாரியாமிஸத்தின்போது வெளியே தோன்றுகையில், டாம்பீகமாகவாவது பிறர் கண்டுகொள்ளும் வழியாகவாவது பகிரங்கமாய் வரவேவராது. அது உலகினில் தோன்றினதே தெரியாதபடி

---

சிலர் சேர்க்கும் சொத்துக்கள் அவர்களுக்கு ஒட்டுவதில்லை. மற்றவர்களுக்கு முழு மொத்தமாய்த் தூக்கிக்கொடுத்து விடுவதற்காகவே அவர்கள் கால முழுதும் உழைத்துச் சேர்த்ததாய்ச் சொல்லும்படியாக முடிகிறது. சந்ததியற்று மரித்த தன் சிறிய தந்தையின் பெரிய சொத்துகளுக்குத்தானே திடீரென்று சொந்தக்காரனுய் விடுகிறுன்.

வெளிவரும். உதாரணமாக, தமது பெயரையே முற்றும் மறைத்து தர்மங்கள் புரிந்த எத்துணையோ பெரியார்களை இங்கு நினைப்பூட்டிக்கொள்ளலாம். அன்னோர் தங்களின் கடமைகளைச்செய்து முடித்தலொன்றையே நாடினரன்றி உலகப்புகழினை ஆசிக்கவில்லை. இதிலிருந்து அந்தப் புனிதோத்தமர்களுடைய ஹிருதயத்தில் எவ்வளவு நிஷ்களங்கமான அமைதியும் பரிசுத்தமும் குடிகொண்டிருந்ததென்று சிந்தித்திடுக. அந்தரங்கமாய் ஒருவன் நற்காரியம் செய்யின், அதனால் அவன் மனது அடையும் இரகசிய மனக்களிப்பும், மன ஆறுதலும் எத்துணை இன்பகரமாக — திருப்தியாக — இருக்கின்றது. இன்னொருவருக்குத் தாங்கள் செய்த நன்மையால் சந்தோஷம் உண்டானதென்று அவர்கள் அறிகையில் மிகவும் மன நிம்மதிகொள்கிறார்கள். இவ்வித பரிசுத்த செய்கைகள் பிறரது கண்களுக்குத் தோற்றவே தோற்றாது. பகிரங்கமும் பெறா. இவ்வாறான உத்தமகுணங்களால் அலங்கரிக்கப்பெற்ற அப்புனிதவானின் உள்ளத்தில் எவ்வித ரகசிய துவேஷமும் விகல்ப சிந்தையும் குடிகொள்ளாது.

ஃ

ஒரு புனிதபுருஷமூர்த்தி தான் கடமையாகக்கொண்டு செய்யும் செயல்களை எவ்வளவு அந்தரங்கமாகப் புரிந்தபோதிலுங்கூட, அவற்றின் மூலமாகத் தோன்றும் எத்துணையோ நற்குணங்கள் அவ்வப்போதைய செய்கைகளினால் எவ்விதமேனும் பிறருக்குத் தெரியும்படிவெளிப்படுத்திவிடும். உலகினரும் வியப்பும் மகிழ்வும் மிகுந்து அப்புனிதனின் செயல்களை எங்கும் பரவச்செய்வர். ஒவ்வொரு நற்செயலுக்கும் தகுந்த காலமும் சமயமும் கிடைத்தால் தான் அதன் மதிப்பு நன்குவிளங்குவதுமல்லாமல், அதைப் புரியும் அன்னோரது மனதும் களிப்பெய்தும்.

ஃ

வறுமையிலுழலும் நற்குணவான் தன் நற்செய்கைகளுக்கு இடம்கொடுக்கவும் சாத்தியமில்லாதிருக்கிறான். சொற்ப அளவேயுள்ள நற்குணங்கள் அவற்றின் செய்கைகளினாலும், மற்றும் சில அவற்றின் வளர்ச்சியினாலும், இன்னும் சில பொதுஜனங்களுக்கென்று உழைக்கப்புகுவதனாலும் உலகத்திற்குத் தெரியவருகின்றன. ஆனால், உலகினைப் படைத்துக் காக்கும் கடவுள் நாம் இப்போது செய்யும் ஒவ்வொரு வேலையையும், நாம் பின்னால் செய்யப்போகும் பிரதியொரு வேலையையும் கவனித்தவாறுள்ளார். நம் குணங்களை உற்று நோக்கி, நம்மை எவ்வழியில் திருப்பவேண்டுமோ அவ்வித வழியை நமக்குக் காட்டுகிறார்.

ஃ

ஒருவனுடைய நற்குண நற்செய்கைகளிற் பல ஒருவிதமுடிவுக்கு வந்து வெளித்தோற்றமாய் விளங்காமையினாலும், ஒவ்வொன்றும் வெவ்வேறு வழியாக உதித்து ஒரு திரை மறைவுக்குள்ளேயே நிகழ்ந்துவருவதனாலும், அந்த மறைக்குந் திரையை விலக்கி அவனையறிந்து நிதானிக்கவும், அவனது உத்தமக் கருத்தினைத் தெரிந்துகொள்ளவும் மனிதவர்க்கத்தில் முடிகிறதில்லை. அவ்வுத்தமனுடைய செய்கைகள் ஒன்றோடொன்று கலப்புண்டு, அதாவது,

---

இன்றைக்கு அவர்கள் உன்னை விரோதித்துக் கொண்டாலும், அவர்கள் பிறகு படும் அனுபவங்களால் நீயே யாவரிலும் மேலான நல்ல மனிதனென்று கண்டு கொள்வார்கள்.

மெய்யானது பொய்போலவும், பொய்யானது மெய்போலவும் தோன்றிக் கொண்டு சேறும் ஜலமுமாய்க் கலங்கிப் போயிருப்பதால், எவ்வளவோ நற்காரியங்களில் அவனது பிரயத்தனங்கள் சம்பந்தப்பட்டிருந்தாலும், அவன் பல உத்தமச் செயல்களைப் புரிந்திருந்தாலும், உலகினர் ஒன்றை அதிகமாகப் பார்த்தும், மற்றொன்றைக் கொஞ்சமாகக் கண்டும், அதிலிருந்தும் தத்தமக்கு வெவ்வேறு அபிப்பிராயங்களைக் கொள்வதனால்,——ஒரு நற்குணவானை உலகம் உள்ளபடியே சரியாக நிதானித்து மதிக்க முடியாமல் போய்விடுகின்றது. நற்குணவானை ஒருவன், அவனது செய்கைகளை நன்றாக ஆராயாத தோஷத்தால் அவனை மிகவும் கெட்டமனிதனென்று கூறுகிறான். இன்னொருவனோ அந்த நற்குணவானுடைய வேறு ஒரு செய்கையைக்கொண்டு அதிலிருந்தும் அவனைப் பெரிய மேதாவியென்று அபிப்பிராயம் வெளியிடுகிறான். ஒரு நற்குணவானையே ஒருவன் ஒரு விதமாகவும், வேறொருவன் இன்னொருவிதமாகவும் நினைக்கத் தொடங்குதல் சாதாரணம். உலகம் பலவிதம். நற்குணவந்தர்களை அன்னோரின் வெளித்தோற்றத்தின் வாயிலாகவே மதிப்பிடுவோன் ஒருக்காலும் அன்னோரைப் பற்றிச் சிறந்த எண்ணங் கொள்வ நியாயமில்லை. அந்தக் குணவந்தர்களைப்போன்ற பரிசுத்த ஹிருதயம் வாய்ந்த உத்தம புமான்கள்தான் அந்நல்லோரின் மனத்தினுள்ளே நுழைந்து அன்னோருடைய மாசற்ற உண்மையையும் உயர்வையும் அறிய முடியும்.

ஃ

அந்த உத்தம புமான்கள் தங்களின் மனத்தினுள் மறைந்திருக்கும் உயரிய நல்லெண்ணங்களைத் தமது வெளிச்செய்கைகளால் ஏன் உலகிற்குக் காட்டக்கூடாதென்ற ஒரு வினவும் இங்கு உதிக்கலாம். அவ்விதம் அவர்கள் மனத்திடையே பொதிந்து கிடக்கும் நற்குணங்கள் வெளிச்செய்கைகளின் மூலமாக வெளிவந்து பலரையும் உற்சாகப்படுத்துவதற்கு அதற்கேற்ற சக்தியைப் போதுமானபடி பெறுதிருப்பதே முக்கிய காரணம். ஒருவனுடைய நற்குணங்கள் வெளிவருவதற்கு அதற்குத் தகுந்த சந்தர்ப்பங்கள்—தருணங்கள் வேண்டும். அந்த சந்தர்ப்பங்களின் மூலமாக அந்நற்குணங்கள் வெளிக்குத் தோன்றினால்தான் சிறப்பும் மேன்மையும் ஏற்படும்.

ஃ

எவ்வித தருணங்களும் வாய்க்காமலிருக்கையில ஒருவன் தன்னை நற்குணவானென்று வலியக் கூறிக்கொள்ளின் உலகம் அவனைப் பரிசிக்குமேயன்றி உயர்த்திப்பேசாது. ஒருவன் தனது நற்குணங்களால் தூண்டப்பெற்றுச் சில நற்செயல்களைப் புரிய நினைத்திருக்கிறான். அவனது நினைவுகள் கூடிக காரியம் முடிவதற்கு அவனுக்குத் தகுந்த சந்தர்ப்பங்கள் எப்போது எதிர்ப்படுமோ, அவ்வித சந்தர்ப்பங்கள் அவனுக்கு எதிர்ப்படும் வரையில் அவன் புரிய நினைத்துள்ள நற்செயல்களும் வெளிவராமல் மறைப்புண்டு கிடக்கவே நேர்கின்றன. அக்காலையில் அவனைத் தீயோன் என்றும், சோம்பேறியென்றும் உலகம் தூற்றினால், அவன் அதைச் சகித்துக்கொள்ள வேண்டியதேயன்றி வேறுவழியில்லை. அந்தத் தூற்றல்களை எதிர்த்துத் தனது நல்லெண்ணங்களை வெளியிட

உன் நோக்கங்களைப் பின்பற்றுதவர்களை எவ்வளவுதான் நீ கஷ்டப்பட்டாலும் உன் பக்கமாக அவர்களைத் திருப்புவது சிரமம்.

அது அவனுக்குச் சரியானசமயமாகவு மிராது. அவன் நினைத்த நற்செயல்கள் நிறைவேறி முடிந்தாலன்றி அந் நற்செயல்களுக்கு மகிமையுமில்லை. அவ்வித மகிமைக்குப் பாத்திரமாகிக் கனியாத நற்செயல்களை அதற்குரிய காலம் வருமளவும் எதிர்நோக்கி மறைத்துவைப்பதைத் தவிர, நிறைவேறுவதற்கு முன்னம் வெளியிட்டுப் பயனில்லை. ஆகவே, தன் நல்லெண்ணங்களைத் தன் மனத்துள் இரகசியமாக வைத்திருக்கவே ஒவ்வொருவனும் கட்டாயப்படுத்தப் படுவதால் அவை வெளி வருவதற்கில்லாததாகின்றது.

ஃ

மேலும் இன்னொன்று: ஒருவனிடம் முதலில் உதிக்கும் நற்குணங்கள் சொற்பமாகவே, ஒரு சிறு புள்ளி அளவினதாகவே இருக்கும். அவற்றினின்றுந்தான் நாளடைவில் கர்ப்பம் வளர்வதுபோல் அந்த குணங்கள் வளர்ந்து பெருகி விருத்தி கொள்ளவேண்டும். ஆகவே, ஒருவனிடம் முதலில் நற்குணங்கள் அதிகமாக இராமலும், எவ்வளவு வரையில் இருக்கிறதென்று ஒரே தடவையில் வெளியிட முடியாததாகவும் இருக்கும். ஒருவன் செய்யும் நற்செய்கைகள் அவன் மனதினுள் இருக்கும் பரிசுத்த எண்ணத்தின் முழுச் செய்கைகளல்ல. அது அந்த நற்செய்கைகளின் பிரதிபிம்பத்தினுடைய சிறிதான சாயலேயாகும். ஆனால்,எல்லாம் அறிந்த கடவுள் அந்த சிறுசாயலைப்பெருகவைத்து அந்த நற்குணங்கள் ஒருவனிடம் பூரணமாய்ப் பதியும் வரையும் அவனை அவ்வழியிலேயே பழக்குவிக்கின்றார். இவ்விதமாக, அம்முழுமுதற் கடவுளைத்தவிர, மானிடவர்க்கத்தினர் எவராலும் ஒருவாது வெளிச் செயல்களைக்கொண்டு குணங்களை நிதானிக்க சக்தி உண்டாவதில்லை.

ஃ

குறித்த ஒரு சிலரை நற்குணசாலிகளென்று மானிட வர்க்கம் கண்டு கொண்டாலும், உண்மையில் எவ்வளவிற்கு அவர்கள் நற்குணசாலிகளென்று கூற முடியாது. அப்படி நற்பெயரெடுத்தகாலையும், அது பிறரால் இன்னொரு வகையில் அவமதிக்கப்பட்டும், இகழ்ந்து கேவலப்படுத்தப் பட்டும் கிடக்குமே தவிர, எல்லோராலும் சிறந்தோனென்று போற்றும் படியாகப் பெயரெடுக்க முடியாது. ஆகவே, கடவுள் ஒருவர் தான் உள்ளபடியறிந்து பரிசு நல்கத்தக்கவரேயன்றி, மானிடவர்க்கத்தால் அதைச் செய்ய முடியாது.

ஃ

மிக்க மேன்மையான பதவியை விரும்புவோனுக்கும், பெரிதும் பேராசை பிடித்தோனுக்கும் கடவுள் தனது குணங்களையறிந்து பாராட்டினால் போதுமென்ற சிறந்த எண்ணம் உதிப்பதில்லை. அவனுக்கு இப்பூவுலகிலேயே தன்னைச்சுற்றி ஈ மொய்ப்பதுபோல் மொய்ப்பவரே தன்னைப் போற்றவேண்டுமென்று அவா. அதாவது, அவன் இவ்வுலகின் புகழ்ச்சியைப் பெரிதும் விரும்புகிறானேயன்றி, கடவுள் தன்னைப் புகழவேண்டுமென்று கோருவதில்லை. ஆகவே, பாவமும் அநீதமுமான காரியங்களைச் செய்தேனும் இவ்வுலகத்தின் புகழைப்பெற அவன் மனம்

---

ஒரு தூர விருந்தாளி வீட்டிற்கு வந்திருக்கையில் அவர் முன்பாக வீட்டிவிருப்போர் குலைத்துச்சண்டை பிடித்துக்கொண்டு தங்களின் கஷ்டநியாயங்களை அவரிடம் சொல்லப்போவது தங்களின் கௌரவத்தைத் தாங்களே கெடுத்துக் கொள்வதாகும்.

முயல்வதாகின்றது. இது தப்புவழி. தவறிவிழும் படுகுழி.

ஃ

எனவே, புகழை நியாய வழியில் அடைய விருப்பங்கொண்டோன் தன் எண்ணங்களையும், தன் காரியங்களையும், தன் விருப்பங்களையும் எதற்குமே கடவுளை நம்பிச் செல்லுகிற இந்த சாந்தமான தூய்மையுள்ள வழியில் இருப்பக் கடவானாக. அப்போது பரிசுத்தம் நிறைந்த அப்பரந்தாமன் அவனுடைய பரிசுத்தத்திற்கு மதிப்பு கொடுத்து ஆதரித்து, அவனை என்றும் மறவாத சிஷ்யனாகத் தான் ஏற்றுக்கொண்டு, பூவுலகிலும் அவனுக்கு நற்புகழைக் கொடுத்து, மேலுலகிலும் மேம்பாட்டைத் தந்து, தேவ தூதர்களின் நடுவில் வீற்றிருக்கச் செய்வார். பரிசுத்தமான நற்குணத்திற்கு இவ்வுலகிலும் மேலுலகிலும் என்றும் அழியாத புகழ் உண்டு என்பது நிச்சயம். பரிசுத்த மில்லாத பாவநெஞ்சினருக்கோ அன்னோர் இவ்வுலகில் தேடும் புகழ் திருப்தியற்றதாகவும், பல குறைபாடுகளுள்ளதாகவும், பகவானுக்கு அவர்களின் பொய்ப் புகழில் திருப்தியற்றும் இருக்கும். ஆகவே, நற்குண அஸ்திவாரத்தின் மீது நிலை நாட்டப்பெற்ற புகழையே ஒவ்வொருவரும் தேடுவதற்கு முற்படவேண்டும். அதுதான் என்றும் அழியாத புகழாகும். மனோ சாந்திக்கும் அதுவே வழி.

## நூலாசிரியரின் சம்பாத்திய நிலை.

எட்கார்வாலஸ் என்பவர்—நாவல் எழுதுவதில் சிறந்தவர். ஒருநாளைக்கு இரண்டு—மூன்று நாவல்கள் எழுதும் திறமையுடையவர். அவர் பேனாபிடித்து எழுதுவதில்லை. காப்பிசாப்பிட்டதும் மேஜையில் உட்கார்ந்து மேஜைக்கருகிலுள்ள இயந்திரத்தை நோக்கிக் கதையை சொல்லிக்கொண்டே போவார். அது அவ்வொலியைப் பிடித்து உடனே டைப் அடித்துவிடும். தான் எழுதிய கதைகளைத் திரும்பவும் படித்ததே கிடையாது. சொல்லிக்கொண்டு போவதோடு சரி. ஒரு புத்தகம் எழுதுகிறார் என்றதும் உடனே வியாபாரிகள் காபிரைட் செய்துவிடுவர். கோடிக் கணக்காக சம்பாத்தியம். மூன்று மாதத்திற்குமுன் அவர் இறந்துவிட்டார். அவர் கணக்கைப் பார்த்தபோது சம்பாதித்த பணத்தை 'ரேஸ்'—பந்தயத்தில் வைத்து ஆடித் தோற்று, கடன் வைத்துவிட்டுப்போய்விட்டார். இது அவர் இறந்த பிறகே தெரியவந்தது. எல்லோரும் ஆச்சர்யப்பட்டனர். இதுபோன்றே நூலாசிரியராயினோர் தமக்கு கிடைக்கும் தொகைகளுக்குத் தகுந்தபடி எதிர்பாராமலே நேரும் செலவுகள் எண்ணில, அன்னோர் பெரும்பாலும் ஏழைகளாகவே யுள்ளார்.




# ஸ்ரீமதி சுந்தரம்மாள்.

## (பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை.)

---



நாம் எழுமுன் எழுந்து, இல்லம் விளக்கி, நமக்கு இன்சொற் கூறி, இஷ்டம்போல் நடந்து, இனிய உணவு தந்து, நமது நல்லெண்ணங்களை வளரச் செய்யும் நங்கையாயின் அது நாம் பெற்றபாக்கியம் அன்றோ? இல்லற ஞானியாகிய நாயனார் தமது மனைவி இறந்தபோது, அவர்மனைவியுண்டு, மக்களுண்டு, மற்ற வாழ்வுண்டு, என மகிழ்வதெல்லாம் மதியீனம் என்றறிவாராயினும் அவர் மயானத்தில் கூறிய—

அடிசிற் கினியாளே அன்புடையாளே
படிசொற் கடவாத பாவாய்—
அடிவருடிப்
பின்தூங்கி முன் எழும் பேதையே
போதியோ
என் தூங்கும் என் கண் இரா.

என்னும் பாட்டு உங்களிற் பலர்க்கு ஞாபகம் இருக்கலாம். இத்தகைய பெண்மணிகளன்றோ துரோபதை—சீதை—தமயந்தி—சாவித்திரி—சகுந்தலை முதலியோர். நமது ஆரிய தேசத்தைப் புண்ணிய தேசமாக்கி, இன்றளவும் அன்னியரால் புகழவைத்தது மேற்கூறி மடநல்லாராகும். காட்டில் சீதை தம்மைப் பிரிந்தபோது இராமர் அடைந்த வருத்தத்தையும், இலங்கையில் சீதை பட்ட துன்பத்தையும் யாரே கேட்காதார்? இராமர், "என் சீதா! என் அரசி! என் செல்வி! என் உயிரே! நீ பிரிந்தாய். நான் இறந்திலேன். நீ இன்றி எனக்கு இனி நாடேன்? நகரமேன்? இவ்வுடலேன்? உயிரேன்?" என்று காட்டில் அழுது புறண்டதை நீங்கள் படித்திருப்பீர்கள். சீதை கோரரூபிகளான அரக்கிகள் கையில் சிக்கி அவஸ்தைப்பட்ட காலையில் தன்நாயகனின் நாமமேபிராணதாரமாகக் கொண்டு உயிர் வைத்திருந்ததை நீங்கள் வாசித்திருப்பீர்கள். நளன் காட்டில் தன் மனைவியை விட்டுப் போனபோது, புலம்பியதை நீங்கள் அறிவீர்களே. இவ்வித மங்கையர்க்கரசிகள் முன்காலத்திலன்றி இக்காலத்தும் உளர். காந்தி யென்பவர் நம்மவர் நன்மையின் பொருட்டு, தென் ஆப்பிரிகாவில் ஜெயில்வாழ்வைப் பெற்றபோது, அவ்வாழ்வைத் தானும் வகிப்பது தர்மமென்றெண்ணிய அவர் மனையாளின் செய்தியை நீங்கள் கேட்டிருக்கலாம். இத்தகைய பெண்களைத் தர்மபத்தினியாக வாய்க்கப்பெற்றவரின் பாக்கியமே பாக்கியம்! இதற்கன்றோ நமக்கு மனைவிகளாவார் நாம் செய்த பூர்வ கர்மத்தின் பயனென்பார் பெரியோர்.

## சுந்தரம்மாள்

என் மனையாள் சுந்தரியை மணந்து இன்று ஏறக்குறைய 15-வருஷங்களாகின்றன: இப்பதினைந்து வருடங்களை நானும் என்மனைவியும் தனித்தும், சேர்ந்தும், என் பெற்றோரில்லத்திலும், என் மாமனார் வீட்டிலும் கழித்தோம். அநேக வூர்களில் பல குடும்பங்களோடு கூடிவாழ்ந்த சமயங்களுமிருந்தன. நாங்கள் காட்டில் சஞ்சரித்தோம். கிராமங்களில் குடியிருந்தோம். பட்டணங்களில் தங்கினோம். ஏழைகளுடன் உறவு கொண்டோம். தனவர்தருடன் கூடினோம். நான் செய்த நல்வினையின் முடிவாக எனக்கு இனிய மனையாள் வாய்த்தாள் என்றும், நான் பெற்ற பேறு எவர் பெற்றாரென்றும் நான் எண்ணித் தருக்கினேனென்று உங்கள் முன்பு உறுதியாகக் கூறவல்லேன். இவ்வுண்மையை என் உறவினரும், உற்றாரும், என் நண்பரும், மற்றவரும் அறிவார்கள். முதலில் நான் மணந்த போது என் மனைவி குறைந்த கல்வியுடையா ளென்றும், உயர்ந்த எண்ணங்கள் கொண்டவளல்லள் என்றும் எண்ணிவருந்தினேன். தற்கால நாகரீகமாகக் கொண்ட போலிச் சிறப்பும், அலங்காரமும காணமல் உள்ளம் மாழ்கினேன். சமர்த்தான பேச்சும், சுறுசுறுப்பான நடையும் இல்லை யென்று ஏங்கியதுமுண்டு. நாளேற நாளேற நாண்மலரைப் போலும், நன்மணியைப்போலும், நற்குண நற்செய்கைளெல்லாம் ஒவ்வொன்றாய்த்தோன்றி வளர்ந்து, எங்கும் கமழ்ந்து, எவர்க்கும் இனிதாகத் தோன்றி எனக்கேற்ற மனையாளானதை எவர்தாம் அறியார்? நான் கதையாக வர்ணித்த "மரகதவல்லி"யின் பிற்பட்ட குணங்களெல்லாம் என் மனைவியிடம் கண்டனுபவித்தவையன்றோ? நான் எழுதிய, "கமலம்மாள்" "சுப்பம்மாள்" முதலிய கதாநாயகிகளின் இனிய செய்கைகளெல்லாம் என் இல்லாளிடம் கண்டு இன்புற்றவையன்றோ? நூலாசிரியர் கண்ணுறுங் கண்டவற்றைக் கூறுவதன்றி வேறில்லையென்பது உண்மையாயின், நானும் என் கதாநாயகிகளை வர்ணித்தெழுதியது என் அரிய மனைவிபாற் கண்ட அற்புத குணங்களையே யாகும்.

ஃ

நானும் என் மனைவியும் குடிசையிற் குடியிருந்தோம். மாடங்களில் வசித்தோம். சுகத்தில் பூரித்தோம் துன்பத்தில் மூழ்கினோம். நோயிலுழன்றோம். வறுமையில் மலிகினோம். என் மனைவியின் அறிவும், ஞானமும், குணமும், நடையும், நாளுக்கு நாள் விர்த்தியாகி முடிவில் என் கதாநாயகி "மரகதவல்லி"யைப் போல, நான் உலக நடையிற் புகுந்து சிந்தை நொந்து தியங்கும் போதெல்லாம் எனக்கு அறிவு புகட்டும் அரிய நிலைமையை யடைந்தாள். தன் துன்பத்தை எண்ணாது, தன் கண்ணையும், கருத்தையும் என் சுகத்தில் வைத்து என் சுகத்திற்காகும் எல்லாக் காரியங்களையும் இனிது முடிப்பாள். நாளுக்கு நான் என் எண்ணங்களை யெல்லாம் கண்டறிந்து அவற்றைப் பூர்த்தி செய்து எனக்கு ஏதும் குறையின்றி நடப்பாள். வேலைக்காரர் இருப்பினும், அதிகாலையிலெழுந்து வீட்டை அலங்கரித்து நான் வெளியிற் சென்று வருமுன்னே, எனக்கு நல்ல பலகாரங்

---

எந்த சங்கதியிலும் அருகிலிருப்போரது மனப்போக்குகள் தெரிந்தும், சமயா சமயங்களை யுணர்ந்தும் நடந்துகொள்ள வேண்டும். தன்மீது ஒருவன் கோபம் பொங்குகையில் அதைத் தான் வளர்க்க வழிதேடாது தன் மௌனத்தால் அது அடங்கி விடும்படி பார்க்கவேண்டும்.

களைச் செய்து தந்து, அப்பால் என் நாவிற்கினிய கறிகளைச் சமைத்துப் படைப்பான். நான் சாயங்கிரம் கச்சேரியிலிருந்து வந்தவுடனே எனக்கு இதமான உபசாரணை செய்து இன்சொற்பேசியும், தன் அன்பின் மிக்க மக்களை என் அருகே அனுப்பியும் மகிழச் செய்வதுமன்றி, பின்னர் உணவுடையின் நான் படிப்பனவற்றைக் காதாரக் கேட்டுக் களித்தும், தான் அறிந்த இனிய கதைகளை எடுத்துக் கூறியும் வருவான். கைம்பெண்களின் மறு மணத்தைக் குறித்தோ, ஜாதி விலக்கைப் பற்றியோ, பழைய ஆசாரத்தை நினைத்தோ, இந்தியாவின் சீர்கேட்டைச் சிந்தித்தோ, நமது பெண் மக்களின் நடைத்தாழ்வை யெண்ணியோ, அன்பைப் பற்றியோ, கடவுளைக் குறித்தோ, உலகநடை சம்பந்தமாயோ, பேசுவனவற்றைப் பிரியமாகக் கேட்டு, என் எண்ணங்களைத் தன் எண்ணங்களாக்கிய பிறது, என்னிடம் புதிய எண்ணங்களை எழவும் செய்வாள்.

ஃ

ஏழைக்குடும்பிகனின்நடுவிலிருந்த காலையில் அவர்களுக்குத் தன்னால் இயன்ற உதவிசெய்தும், இன்சொற்புகன்றும், அவர்கள் அன்பைப் பெரிதும் கொள்ளை கொண்டாள். தனவந்தர் உறவும், பெரிய மனிதரின் நட்பும் கொண்டபோது இவளின் நடையையும், குணத்தையுங் கண்டு, இவள் அன்பைப் பெற விழையாதார் அரியராவர். வேண்டாதாரிடம் வெறுப்புக் கொள்ளும் இயல்புடைய நான், என் மனையாள் எல்லோரிடமும் காட்டிய அன்பைக் கண்டு, என் அறிவை எண்ணி இகழ்ந்த சமயங்கள் பலவுள. நாம் பிறருக்கு ஊழியம் செய்வதே பேரின்பம் என்று நான் பிறருக்குப் பிரசங்கிப்பவனாயினும், இவ்வூழியம் வேண்டியவர்க்கே செய்து, வேண்டாதாரிடம் செய்யத் தவறுகையில், என் காதலி எல்லோர்க்கும் இயற்றும் ஊழியத்தைக் கண்டு நான் வெட்கிய நாட்கள் அநேகம் உண்டு. இரவில் அண்டை அயலகத்து ஏழைப்பெண்கள் தேள் கடித்தோ, தலைவலியுற்றோ ஓடி வருவாராயின் என் மனையாள் உடனே விழித்தெழுந்து தன்னிடமுள்ள அமிர்தாஞ்சனம் என்னும் மருந்தைக் கடித்த இடம் காலாயினும் நோய் நீங்கும் வரைத் தேய்த்து அனுப்ப நான் பல கால் கண்டுள்ளேன். தான் அருமையாகப் பலகாரமோ, பதார்த்தமோ செய்யின், அவற்றை ஏழைகளுக்கும் வழங்கி, ஏழைகள் அவ்வகை உணவை உண்டு களிப்பதே நமக்கு இன்பம் என்றும், நாமே உண்ணுவதா லுண்டாகும் இன்பம் துன்பமே என்றும், எனக்கு அடிக்கடி எடுத்துரைப்பாள். ஓர் கறியை ஒரே வகையாகச் செய்வது நன்றன்று என்னெண்ணி, தான்பிறரைக் கேட்டும், நூல்களிற் படித்தும் பலவகைக் கறிகளாக என் நாவிற்கு இனிமையாய்ச் செய்வான்.

ஃ

தினக்கு நோயுறினும், துன்பம் உண்டாயினும் நான் கண்டால் வருந்துவேன் என்றும், அதனால் எனக்கும் பிணியுண்டாகும் என அஞ்சித் தன் துன்பத்தை வெளியிடாது எனக்கும், தன மக்கள் பலர்க்கும் வேண்டிய பணி யாவும் தானே செய்து தன் சுகத்தை முற்றும் வெறுத்த என் அருமை மனைவியிவள். எளியவர்க்கு இரங்கி எனக்கு அறிவியாமலே அவர்க்கு அன்னம் படைத்தோ, அவர் பெண்கட்கு

---

என் சங்கதிகளை யறிந்து அதனால் நான் கெட்டவனென்று பிறர் நினைத்தாலும் பாதகமில்லை. நான் கெட்டுப்போனவற்றை விவரமா யறிந்து மற்றவர்கள் புத்தி பெற்றால் அதுவே எனக்குப் போதும்.

இரவிக்கை தன் கையால் தைத்துக் கொடுத்தோ, அவர் மக்களுக்கு சொக்காய் முதலியன செய்துகொடுத்தோ, தனது அன்பைக் காண்பிக்கும் தங்கமிவள். என்னினும் தாழ்ந்தவர்பால் தவறு கண்டு நான் கோபப்படுவேனாயின், தன் வேலையைச் சரியாய்ச் செய்யாத வேலைக்காரியிடம் அன்பு காட்டி அவன் குற்றத்தை மாற்றும் குணவல்லியிவள். என்னைக் காண வரும் நண்பரோடும் வெளியிற்சென்று நெடுநேரம் பேசிக் கொண்டிருக்கையில் காபி அருந்தும் வேளையோ, உண்ணும் சமயமோ மீறுமாயின் அதை நான் வீட்டிற் சொல்லிவிட்டு வரவில்லையே யென்று வருந்துவேன். அப்போதெல்லாம், என் எண்ணத்தை முன்னமே உணர்ந்த முனியைப்போல காபியும் உண்டியும் முன்பே தயார்செய்து என் அன்பைக் கவரும் அரிவை இவள். மலரை மறைத்து வைப்பினும் அதன் மணமானது அது இருக்குமிடத்தைக் காட்டுவது போலும், அந்நிய தேசத்திருப்பினும் இவள் அன்பின் சிறப்பால் "சுந்தரம்மாள் கணவன்" என்று என்னைக் குறிப்பிட்டும், இவளைச் சிறப்பித்தும் பிறர் சொல்ல வைத்த பெண்ணரசியிவள். பிரசவிப்பதற்கு என்னைப்பிரிந்தபோதெல்லாம அக்காலைத் துன்ப நாளாக மதித்தும், என்னுடன் திரும்பச் சேரு நாளை இன்ப நாளாக எண்ணியும் வந்த வந்திழையிவள். பிறர், எம் குடி வாழ்க்கையையும், எம் காதலையும் எம் பேச்சையும், எம் செய்கையையும் கண்டு பொறாமை கொள்ள வைத்த பொற்கொடியிவள். தம் மனம்போல நடந்த மனைவிகளால் நொந்து "சுந்தரம்மாளைக் கண்டு நடக்கலாகாதா?" என்று மனிதர் பலரைச் சொல்ல வைத்த வனிதையிவள். கல்விச் செருக்கால் எந்நேரமும் புஸ்தகமும், கையுமாக நின்று தம் கடமைகளைச் செய்யத் தவிர்க்கும் காரிகையர்க்கு "தம் கணவரின் மனம் போல நடக்கக் கற்கும் கல்வியே உண்மைக் கல்வி" யென்று போதித்ததுமன்றி தானே நடந்து காட்டிய நாரீமணி இவள். நாளும், நாளும் தன் அன்பால் என் அன்பைக் கொள்ளை கொண்டு, "இவளே என் வாழ்வு, இவளே என் உயிர், இவளின்றி நான் மூச்சும் விடேன்" என்று என்னைப் பலகால் சொல்ல வைத்த பாவை இவள். நான் தனித்துள்ளபோதெல்லாம் இவளைப் பிராணாதாரமாகக் கொண்டு எந்நேரமும், இவள் பேச்சிலும் நடையிலும் என் நினைவை நிற்கச் செய்து என் வாழ்வைச் சுகவாழ்வாக்கி என்னைப் போலும் பேறு பெற்றோர் வேறிலர் என்று கர்விக்க வைத்த சீமாட்டியிவள். ஃ

சுந்தரம்மாளின் ஜீவியம் மற்ற பெண்களுக்கும் ஓர் நல்ல படிப்பினையாகும். தனது பர்த்தாவினிடத்தும், தனது பந்துக்களிடத்தும், மற்றும் நெருங்கி யுள்ளோரிடத்தும் ஒரு பெண்மணி எவ்விதம் நடந்துகொள்வதென்பதைச் சுந்தரம்மாள் தானே நடந்து காட்டியுள்ளாள். எல்லோராலும் போற்றப்படும் பெண்மணியாக விளங்குதற்கே நங்கையர் நாளும் நாளும் முயலவேண்டு மென்பது சுந்தரம்மாளின் கருத்து. இக்கருத்தை என் ஸகோதரிகளும் ஏற்று நற்குணச் செல்விகளாக வேண்டுகிறேன். இனி அடுத்த ஸஞ்சிகையில் சுந்தரம்மாளின் பிரிவைக் கூறுகிறேன்.

ப. சி. கோவிந்தசாமி ராஜா.

---

நீ எவ்வித தவறுதலும் உன் மனமறியச் செய்யாதிருக்கும்போது உன்னை நிந்திப்போர்உன்மேன்பாட்டில் பொறாமைகொண்டவர்களாகவே இருக்கலாம்.




## களங்கமும் களங்கமின்மையும்.

---



"களங்கத்துக்கே தான் சிக்ஷை; களங்கமின்மைக்கு எப்போதுமே விடுதலை" என்றார் அல்லாபிக்ஷை. "ஓ! அது சரி; ஒப்புக்கொள்கிறேன். ஒருவன் தனக்கு இனி மீட்சியில்லையென்கிற நினைவினாலோ, தான் உத்தேசித்த உபாயங்களெல்லாம் தவறி வீணாயிற்றென்பதாலோ உயிரை வெறுத்துத் தற்கொலைக்குத் துணிகிறான். தற்கொலை—ஒரு குற்றமாதலின் அச்செய்கைக்காக அவன்மீது வழக்கு தொடரப்படுகிறது. இன்னொருவன் கிணற்றிலோ ஆற்றிலோ தவறி விழுந்து விடுகிறான். உடனே அவனை வெளியில் எடுத்து விடுகின்றனர். அவன் கிணற்றில் வீழ்ந்ததற்காக அவன்மீது குற்றம் சாட்டப்படுவதில்லை. அவன் வேண்டுமென்றே விழவில்லை. அவன் மனதில் களங்கமில்லை. வேறொருவன் தற்கொலை நோக்குடன் கிணற்றில் விழுகிறான். அது குற்றமாகிறது. அதற்குக் காரணம் அவன் மனதிலிருந்த தற்கொலையாகிய களங்கமே" என்று தொந்திச்செட்டியார் நவின்றார்.

ஃ

"சமையல் அறையிலிருக்கும் தன் மனைவியின் சீலையில் தீப்பற்றிக் கொள்கிறது. கணவன் அலறி ஓடி அணைக்கப்போகிறான். வெளிக்கதவு திறந்திருப்பதால் பலரும் உள்ளே வந்து ஜலத்தைக்கொட்டி நெருப்பையணைத்துப் பெண்மணியைக் காப்பாற்றுகின்றனர். இங்கு மனைவி—கணவன் இருவரிடமும் களங்கமில்லை. ஆதலின் சிக்ஷையில்லை. இதே சம்பவம் மற்றோரிடம் நடக்கிறது. கணவன் தன் மனைவியை வெறுத்து, அவள்மீது எண்ணெயைக் கொட்டித் தீவைத்து விடுகிறான். இந்த சமயம் இவன் அலறுவதில்லை. எவரும் உள்ளே வாராதிருக்கத் தெருக்கதவையும் தாள்ப்பாளிட்டு விடுகிறான். பெண்ணின் கூக்குரல் கேட்டு வெளியிலே ஜனங்கள் கூடிக் கதவைத்திறக்கும்படி செய்து உள்ளே நுழைகின்றனர். கணவனே தீ வைத்தவனென்று தீர்மானிக்கின்றனர். கணவனின் களங்கநெஞ்சை அவன் முகம் காட்டி விடுகிறது. போலீஸார் அவனைக் கைது செய்கின்றனர். இந்தக் களங்கநெஞ்சுக்குத் தண்டனை கிடைக்கிறது." என்றார் தாண்டவக்கோன்.

ஃ

உடனே சாம்பார் பிரியர் எழுந்தார். "நானும் இதற்கு ஒரு உதாரணம் கொடுக்கிறேன். மூன்று வயதுள்ள ஒரு சிறுமி பத்துமாதக் குழந்தையான தன் தம்பியைத் தன் கால்களின் இடையே கிடத்தி அவனுக்கு மருந்து ஊற்றுவதாக விளையாட்டாய் மேஜைமேலிருந்த விஷ திராவகத்தைச் சங்கில் ஊற்றிக் கொடுத்து விட்டான். குழந்தையும் அன்றே எம

புரம் சேர்ந்தது. போலீஸார் வந்து விசாரித்துவிட்டு, விஷ திராவகத்தைக் குழந்தைகள் எடுக்காத இடத்தில் பத்திரமாய் வைக்க வேண்டாமாவென்று பெற்றோர்மீது வருத்தப் பட்டுக்கொண்டு சென்றனர். சிறுமி தன் தம்பியைக்கொல்ல நினைத்தாளா? ஐயோ! பாவம்! அவள் மனதில் களங்கமேயில்லை. அவளும் தன் தம்பிக்காக அழுகிறாள். களங்கமற்ற அச்சிறுமியைச் சிக்ஷிக்க வழியேது? களங்கமிருக்கும்போது தான் சிக்ஷை'' என்றார்.

ஃ

"இதே மாதிரி இன்னொரு பரிதாப சம்பவமும் கேளுங்கள். வயிற்றுக்கடுப்பால் கஷ்டப்பட்ட தனது ஒரு வயது குழந்தைக்கு எவரோ சொன்னார்களென்று அரையணு அபின் வாங்கிக் கொடுத்துவிட, குழந்தையும் அதனால் இறக்கும்படியாக, தாயோ அலறித் துடித்து நின்றாள். அவள் தன் குழந்தையைக் கொன்றாளென்று வழக்குதொடர முடியுமோ? அவள் மனதில் களங்கமே இல்லை. அறியாமற் செய்து குழந்தையை இழந்தாள். விதந்துவான ஒரு பெண் ரகசிய சோரத்தால் கருதரித்துக் குழந்தையைப் பெற்று ஓரிடத்தில் எறிந்து மறைகிறாள். அவள் கண்டு பிடிக்கப்பட்டு சிக்ஷை கிடைக்கிறது. காரணம் அவளிடமிருந்த களங்கம் தான்'' என்றார் ஆமவடைப் பண்டாரம். ஃ

"கடவுளிடம் ஒன்றைக் கோரி, அதற்காகப் பிரார்த்தனை செய்து கொள்வதில் சுய நலமாகிய களங்கம் இருக்கிறது; இது உண்மையான பக்தியாகாது. பக்தியில் வசப்பட்டோ னொருவன் அந்தப் பக்திப் பரவசத்திலேயே தன்னை மறந்து பகவானைத் தியானிக்கிறான். இவன் மனத்தில் ஒன்றை விரும்புகிற களங்கமில்லை. பகவானையே விரும்பிப் பக்தி செய்கிறான். ஆகவே, இது பரிசுத்தமான பக்தியாகும். இதில் தோஷம் கூற முடியாது'' என்று குண்டோதரர் கூறினார். ஃ

"நகைகளுக்கும் சொத்துகளுக்குமாகவே ஒரு பெண்ணை விவாகம் செய்து கொள்ளுகிறவனின் மனதில் பேராசை என்ற களங்கமிருக்கிறது. அந்த நகைகளும் சொத்துகளும் கிடைக்காவிடில் அப்பெண்ணையவன் விரும்பமாட்டான். இன்னொருவன், ஒரு சுந்தரியின் அழகுக்கும் மகிழ்நடைபத்திற்குமே அவளைக் காதலிக்கிறான். அந்த சுந்தரிக்குப் பூஷணங்கள் எவையும் இடாமற் போயினும் அவன் காதல் குன்றாது. ஏனெனில் களங்கமற்று அந்நங்கையை மட்டும் விரும்புவதே காரணம்'' என்றார் சுண்டெலிப் புலவர்.

ஃ

"நாவிதன் க்ஷவரகனாய் அசுத்தமாயிருக்கையில் அவனைத் தொட்டால் தீட்டு என்று ஸ்நானம் செய்கிறோம். அந்த சமயம் நாவிதனிடம் அசுத்தமான களங்கமிருக்கிறது. அவனே பிறகு நீராடி சந்தனம் பூசிக் கொண்டு மேளம் வாசிக்க வருகிறான். அப்பொழுது அவனைத் தொட்டால் தீட்டென்று நினைப்பதில்லை. காரணம் அந்த சமயம் அவன் அசுத்தமின்றிக் களங்கமில்லா திருப்பதே'' என்று தாங்தோணி பகர்ந்தார்.

---

வீட்டில் காணமற்போன சொம்பைப்பற்றி வீட்டுக்காரர் கண்டபடி பேசுகிறபோது, அதைக் களவாடினோன் அந்தப் பேச்சுகளுக்கு ஆத்திரப்படாதிருப்பதே பெரிய தந்திரமாகும். அவ்விதமின்றி அந்தத் தூஷணைகளுக்காக ஆத்திரம் கொள்வானாகில் தன்னையே காட்டிக்கொடுத்தவனாய் விடுகிறான்.

"ஒரு குழந்தை தன் தாயின் மார்பகத்தில் பால் பருகுகின்றது. தாயினிடமும் குழந்தையினிடமும் இவ்வேளையில் களங்கமில்லாததால் அது பகிரங்கமாகவே நடக்கின்றது. அது குற்றமில்லை. இதே செய்கை காமவசப்பட்டு நிகழ்கையிலோ அங்கு மறைப்பு தேவையாகிறது. அதற்குக் களங்கமிருப்பதே காரணம்" என்றார் கருடப்பார்வையார்.

ஃ

"பிரம்மரிஷியாகிய சுகர் ஒரு குளத்தின் பக்கம் செல்லுகையில், அங்கு ஆடையின்றி நீராடிக்கொண்டிருந்த பெண்கள் அவரைக்கண்டு நாணமடையவில்லை. ஏனெனில், சுகர் எங்கும் பரப்பிரம்மத்தையே காண்பவராய்க் களங்கமற்றுச் சென்றார். அவரது கண்களில் இப்பெண்களின் உருவம் எதிர்படவில்லை. அடுத்த நிமிஷம் வியாசமுனிவர் அங்கு வரவே, பெண்கள் நாணி சேலைகளையுடுத்திக் கொண்டனர். சுகரைப் பார்த்த போது மட்டும் ஏன் நாணங்கொள்ளவில்லையென்று வியாசர் கேட்டதற்கு, உங்கள் மனதிற்கு நாங்கள் நிர்வாணிகளா யிருப்பதும் ஆடையுடுத்தியிருப்பதுமான பேதாபேதம் தெரிகிறது; அதனால் நாங்கள் சேலையை உடுத்திக் கொண்டோம்; சுகருக்கோ அவ்வித பேதம் தெரியவில்லை; உங்கள் மனதில் பேதம் அறிகிற களங்கமிருக்கிறது; அவர் மனதில் அந்தக் களங்கமில்லை, அதனால் நாங்கள் நாணவுமில்லை—என்றனர். இதைச் செவியேற்று வியாசர் வெட்கினார். எனவே, களங்கமின்மைக்குத் தான் எங்கும் மகிமை. குழந்தைக்குத் தாயிடம் பால் குடிக்கிற நினைவு ஒன்றே தவிர, தாயின் மார்பகத்தின் அழகைக் கவனிக்கிற களங்கமில்லை" என்று பாண்டுரங்கஸ்வாமிகள் பகர்ந்தார். இத்துடன் நமது கடையும் பூர்த்தி பெற்றது.

'பஹதூர்' பொன்வண்டுசெட்டியார்.

## எப்போது போகிறீர்கள்?

---

வீட்டுக்கு விருந்தினராக வந்திருப்பவர்களுடன் உபசாரமாகப் பேசிவிட்டு, இன்னும் ஒருமாதம் இங்கு இருக்கலாமல்லவா, இருந்தால் நல்லதுதான் என்கிறார்கள். அதற்கு விருந்தாளி, இல்லை யில்லை, நான் மறு வெள்ளிக்கிழமை புறப்படப்போகிறேன் என்கிறார். இந்தப் புறப்படுகிற நாள் தெரிவதற்கே அவர்கள் பேச்சுக்கொடுத்துப் பேசியதாதலின், அதைத்தெரிந்துகொண்டவுடன் சம்பாஷணையை முடித்துக்கொள்கிறார்கள். பிறகு வீட்டுக்குள்போய் அவர் அடுத்த வெள்ளிக்கிழமை போய்விடுவார் என்று சந்தோஷ செய்தியாகச் சொல்லுகிறார்கள். ஒரு முக்கிய விஷயத்தைத் தாங்கள் அறிந்து வெளியிட்டதாக அவர்களுக்கு ஆநந்தம். ஹா! நம்மைவிட்டுப் பிரிகிறானே என்று எண்ணுவதில்லை.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# ஹா! எத்தனை பலசாலிகளப்பா!



கானுடுகொத்தாலில் நடந்த பலசாலிகளின் மஹா நாட்டைப்பற்றி விகடன் கேட்டதும், பழங் காலத்திய பீமன் முதலியவர்களை நினைத்துக் கொண்டு பெருமூச்சு விட்டேன்! இன்றைக்குங் கூடப் பலசாலிகள் என்று ஒரு சிலர் அங்கங்கே இருக்கவும், அவர்கள் ஒருமித்து ஒரு மகாநாடு கூடவும் ஆயிற்றென்றால் அது விகடனுக்கு ஒரு சந்தோஷ சங்கதிதான்! ஒரு தேசம் எவ்வளவு சம்பத்துள்ளதாக யிருந்தபோதிலும் என்ன பிரயோஜனம்? அந்த சம்பத்தை அனுபவிக்கும்படியான தேகவலிமையும், மன உல்லாஸமு மிருந்தாலல்லவோ தேசத்தில் செல்வம் நிரம்பியிருப்பதற்கு அழகாயிருக்கும். இவ்விதமின்றி, ஜனங்கள் செல்வ சுகபோகங்களை அனுபவிக்கக்கூடாமல் தேகபல ஹீனர்களாயும் நோயாளிகளாயுமிருந்து அற்ப ஆயுளில் இறந்துவிடுவார்களேயாகில், அந்த செல்வத்திற்கு என்ன மதிப்பிருக்கப்போகிறது? ஒரு தேசத்திற்குப் பிரதான விஷயம் என்னவென்றால், அத்தேசத்திலுள்ளவர்கள் பலிஷ்டர்களாகவும், திடகாத்திரமுள்ளவர்களாகவும், சொற்பகாலத்தில் மரணமடையாமல் நீண்ட ஆயுளுடையவர்களாகவு மிருப்பதுதான். இந்தியா தேசவாசிகள்தான பலங் குன்றினவர்களென்றால்—அதிலும் தென்னிந்தியாவின் பக்கத்திலுள்ளவர்கள் மிகவும் கேவலமான பலமுடையவர்கள். சென்னை இராஜதானியிலுள்ள ஒருவன் பம்பாய்க்காரனுடனாகிலும், அல்லது ஒரு வங்காளியுடனாகிலும் எதிர்க்கவோ, பழகவோ அச்சமடைவான்.

ஃ

ஒரு சென்னை நகரத்தானைவிட ஒரு வங்காளபாபு பலிஷ்டனாகவும் முரடனாகவும் இருப்பதற்குக்காரணம் என்ன? யோசிக்குமளவில் இதற்கு மூன்று காரணங்கள் தோன்றுகின்றன. ஒன்று—சென்னை ராஜதானிக்கு வடக்கே போகப்போக அதிக சூரிய வெப்பமில்லை. அதுவே தேகத்

---

அனுபவ வாசகங்களைப் பழிப்போரும், பிறாது அனுபவ மொழியில் நம்பிக்கை யில்லாதவர்களும், தாங்கள் பட்ட அனுபவத்திலிருந்தும், இனி படப்போகும் புதிய அனுபவங்களிலிருந்தமே அறிவு தெளியவேண்டும்.

திற்குப் பெருஞ்சுகாதாரம்; இரண்டாவது—வடதேசத்தார் செல்வவந்தர்களாயும், கோதுமை, நெய், பால், சர்க்கரை—அதாவது தேகத்திற்குப் பலத்தை ஊட்டி வளர்க்கும் ஆகாரங்களைச் சாப்பிடுகிறார்கள்; மூன்றாவது—இயற்கையிலேயே அவர்கள் இந்தியாவின் வடஎல்லையாகிய இமயகிரி பருவதத்திற்கு சமீபத்திலிருப்பதால், இத்தேசத்தின்மீது படையெடுத்துவந்த அந்நிய அரசாங்கத்தார்கள் பாக்கி மூன்று எல்லைகளும் சமுத்திரத்தால் சூழப்பட்டிருப்பதினிமித்தம் வட எல்லை மார்க்கமாக வரவேண்டியிருந்ததால், அவர்களுடன் நம்முடைய வடதேசத்தார்களே முதன்மையாயிருந்து யுத்தம் செய்துவந்தார்கள். இப்போதிருப்பவர்கள் அந்த யுத்த வீரர்களுடைய பரம்பரையானபடியால், அவர்கள் சுபாவத்திலேயே தென்னிந்தியர்களைவிட பலிஷ்டர்களாகவும், திடகாத்திர முடையவர்களாகவும், நோய் நொடியற்றவர்களாகவும், தைரியசாலிகளாகவும் இருக்கிறார்கள். இதுதான் வடதேசத்தார் பலசாலிகளாயிருப்பதற்கு உண்மையான காரணம்.

ஃ

இவ்விதமே பம்பாய், வங்காள ஜனங்களைவிட ஆப்கானியரும் சீனரும் பர்மாக்காரரும் பலிஷ்டர்களாயிருக்கிறார்கள். இவர்களைவிட பலிஷ்டர்களாயிருக்கும் ஜாதியாரும் உலகத்திலிருக்கிறார்கள். பலசாலிகளின் பெருக்கு ஒரு நாட்டிற்கு முக்கியமான செல்வமாகும். ஆனால், நமது தென்னாட்டில் இப்போதைக்கு நாம் என்ன காட்சியைப் பார்க்கிறோம்? சரீர வலிமையால் பலசாலிகளாயினோர், எங்கோ ஒரு சிலராக, பெரும்பான்மையோர் வேறு வேறு வழிகளில் பலசாலிகளாவதற்கு ஆரம்பித்துக்கொண்டார்கள்! உண்மையாகக் கசரத்து, குஸ்திசெய்து தேக நரம்புகளை வலிமைகொள்ளச் செய்வதை விட்டுவிட்டு, வேறு புதுத் துறையில் இறங்கிக்கொண்டு கும்மாளம் போடுகிறார்கள்! இந்தப் பலசாலிகளைப் பற்றி விகடன் கொஞ்சம் அளந்து கொட்டுகிறேன். கேளுங்கள்?

ஃ

பெண்களுக்குக் கும்மா குத்து கொழுக்கட்டைகள் கொடுத்து ஆவாரிக்கும் பலசாலிகள் எவ்வளவோ பேரை நம் நாட்டில் பார்க்கலாம்! இத்தகையோர் அப்பெண்கள் மஞ்சள் குங்குமத்தோடேயே பிராணனை விட்டதற்குப் பிறகு எச்சிலைக் குத்தகை எடுத்து, அந்தப் பெண்பாவம் பிடித்து அலைவதையும் காணலாம்! அல்லது பிறகு வருகிற இளையாளால் மொத்துண்டு மூலையில் அடங்குவதையும் காணலாம்! மண்ணெண்ணெயை மனைவிமீது ஊற்றிக்கொளுத்தும் பலசாலிகளும், ஒவ்வொரு நகையாகக் கழற்றி விற்றுத்தின்று நடுச்சந்தியில் விடும் பலசாலிகளும், மனைவியை உழைக்கவிட்டு அந்த வருமானத்தில் தாங்கள் உட்கார்ந்து கொழுத்துத் தின்னும் பலசாலிகளும் எவ்வளவோ பேராவார்கள்! தாங்கள் வேலை செய்கிற இடங்களில் பரம சாதுக்களாக நடந்துகொண்டு, வீட்டில் மட்டும் பெண்களின் முன்பு எமகிங்கரர்களைப்போலிருக்கும் பலசாலிகளுக்குக் கணக்குண்டா?

ஃ

---

மற்றொரு பெண்மீது மனம் வைத்துவிட்ட ஒருவன் தன் மனைவியிடம் மிக்க கொடிய சண்டாளனாகவே நடந்து கொள்ளத்தொடங்கி அவள் சீக்கிரம் சாகாளா என்று வாட்டி வதைக்கிறான். இதுதான் ஸ்திரீகட்குத் தந்த சுதந்திரமா என்று வயிற்றெரிச்சலுடன் அலறும்படியாகிறது.

கள்வனை யொருவன் ஓடித் துணிந்து பிடிக்க, சூழநிற்கும் மற்றவர்கள் அவனை நையப்புடைத்துத் தங்களின் பலத்தைத் தெரியக் காட்டிக்கொள்வர்! ஒருவரிடம் பணமோ ஏதுவோ பெற்றுக்கொண்டு பல முறை அலையவைத்துக் கடைசியில்—"தரமாட்டேன், உன்னாலானது பாரடா"—என்று பலத்தைக் காட்டுவார்கள்! "எப்படி என்வகை ஸ்திரீயுடன் பேசலாம், அவன் மண்டையை உடைத்துவிடுகிறேன்" என்று ஆரவாரிக்கும் பலசாலிகளும், அப்படியே மண்டையை உடைத்துத் தூக்கு சிக்ஷை பெறும் பலசாலிகளும் இருக்கிறார்கள்! வாடகைக்கென்று மெதுவாக உள்நுழைந்து வாடகையும் கொடாமல், வீட்டைவிட்டும் போகாமல், கோர்ட்டுக்குப்போய் என்னை எழுப்பிக்கொள்ளு என்று தோள்தட்டும் பலசாலிகள் எத்தனையோ பேர்! ஏதோ ஒரு அன்பு நிமித்தமாகத் தெரிந்தவர்கள் என்கிற அடையாளமாக வீட்டில் வந்து குந்தி, பிறகு வீடே தன்னுடையதென்றாக்கிக் கொண்டு, வீட்டுக்காரனுக்கு வீட்டைக் காலி செய்யும்படி வக்கீல் நோட்டீஸ் விடுகிற பலசாலிகளும் இருக்கிறார்கள்!

ஃ

தின் வீட்டில் அண்டியுள்ள அநாதைக் குழந்தைகளைப் பளீர் பளீர் என்று வையும் பலசாலிகளுக்கும், தங்கள் கடையிலுள்ள சிறுவனை அற்ப பிசகுக்கும் ஓங்கி ஓங்கிப் புடைக்கும் பலசாலிகளுக்கும் நம் நாட்டில் என்ன குறைவா? மாணவர்களின் சிறு குற்றங்கட்குப் பிரம்புக் கையைத் தலைக்குமேல் தூக்கி வீசும் வெள்ளைத் தலைப்பாகை வாத்தியார்களின் பலம் யாருக்காவது வருமா?

ஃ

எல்லா வேலைகளிலும் அனுபவம் பெற்று, கடைசியில் எந்தத் தொழிலிலும் ஒட்டிக்கொள்ளாமல்—எந்த வேலையுமே கிடைக்காமல் திண்ணைத் தூங்கிகளாயிருக்கும் பலசாலிகளின் எண்ணிக்கை இயம்பவும் கூடுமோ? பி. ஏ; எம். ஏ; பட்டம் பெற்ற பலசாலிகளின் தொகை அளவிடக்கூடியதா? சொர்க்கத்துக்கும், . முன்பு இறந்து போனவர்கள் நல்ல பதவி சேர்வதற்கும் தாங்களே கடவுளால் ஏற்படுத்தப்பட்ட வழிகாட்டிகள் என்று கூறிக்கொண்டு உலகத்தைத் தங்களுக்கு உட்படச் செய்து கொண்டு ஜீவிக்கும் புரோகிதப் பலசாலிகளின் சமர்த்து எவர்க்குதான் வரும்! இங்கே வாய்யா, அங்கே வாய்யா என்று பிரயாணிகளின் மூட்டைகளைப் பிடித்திழுக்கும் வண்டிக்கார பலசாலிகளின் பராக்கிரமத்தைப் பட்டவர்கள் தான் அறிவார்! ஒவ்வொரு புண்ணிய க்ஷேத்திரத்திலும் வருகிற யாத்திரீகர்களை ஏமாற்றிப் பறிக்கும் தொழிலையே கொண்டு அதையே ஒரு ஜீவனமாக நடத்துகிற பலசாலிகள் எத்தனை பேரோ! ஆபீஸில் அனைவரையும் அதிகாரம்செய்துவிட்டு, வீட்டிற்குள் வந்ததும் பெண்டாட்டித்தெய்வத்திற்குக் கட கட வென்று நடுங்கும் பலசாலிகளையும் அங்கங்கே பார்த்திருக்கலாம்!

ஃ

பிரஸவத்தை ஒரு அலக்ஷியமாகச் சமாளித்துவிடுகிற நங்கையரின்மனோ

---

மற்றவர்கள் தன்னைப்போல் தவறி விழாதிருப்பதற்காக, தான் தவறிச் செய்து விட்ட ஒரு தவறுதலைச் சொல்லிப் புத்தி கூறுவது எவ்வளவோ மேலான செய்கையாகும்.

பலம் ஆண் மக்கட்கு உண்டாகுமா? எவ்வளவு பெரிய கூட்டத்தையும் சமாளித்து உபசரித்து அனுப்பிவைக்கும் விநய சாதுர்ய பலங்கள் பெண் பிறப்புக்கே உரியதன்றோ? எழெட்டு குழந்தைகளுடன் போராடும் ஒரு தாயின் பலம் என்ன இலேசா? புதிதான இடத்தில் வாழச்சென்று அங்குள்ளோரின் குணங்களை யெல்லாம் கண்டு அதற்கேற்றபடி நடந்து குடும்பத்திற்கு நல்ல பெண்ணாகிச் சமாளிக்கும் பலம் என்ன சாமான்யமா? கணவனுள்ளபோதும், பிறகும் குடும்பத்தைச் சீராக நடத்திச் செலுத்தும் பெண்மையின் பெரிய பலத்திற்கு நிகர் வேறுண்டா?

ஃ

தன் தெருவுக்குத்தானே தலைவனென்று மதங்கொண்டு மார்பு தட்டிய படி புறப்படும் பலசாலிகள் எத்தனை பேர்! நாடகம், சர்க்கஸ் முதலியவற்றில் கலகத்துக்கும் அடி தடிக்கும் தயாராக வாயிற் காப்பாளராக நிற்கும் பலசாலிகளும் உண்டல்லவா? இனி வரப்போகும் மஹா கனத்த இல்வாழ்க்கையைத் துணிகரமாய் வாவேற்கச் செல்லும் புதிய தம்பதிகளும் ஒருவித பலசாலிகள் தானே! ஓ! அவனை ஜெயிலுக்கு அனுப்புகிறேனென்பவன் மற்றொரு பலசாலி! வரானமான நூல்களை இயற்றிடும் ஆசிரியர்களும் பெரிய பலசாலிகள்தான்! எஜமானின் பெயரைச் சொல்லிக் கொண்டு அந்தப் பிரதாப கௌரவத்திலே தலைத்திமிர் காட்டும் அவனது வேலைக்காரர்களும் பெரிய பலசாலிகள் தான்! சகோதர பலங் கொண்டு ஆர்ப்பரிப்போரும் பலசாலிகளே! நண்பர்கள் உறவினர்கள் முதலியவர்களின் பலங்கொண்டோரும் பலசாலிகளே! பாங்கியில் போட்டுள்ள பணத்தின் சக்தியால் வலிமை மிகுந்து தலையை யுயர்த்தி நடப்போரும் பலசாலிகளே! கணவனின் தயவு பெற்று மாமியை எதிர்க்கும் மருமகளும், குமாரனைக் கையில் போட்டுக்கொண்டு மருமக்களை வாட்டி வதைக்கும் மாமிகளும் மகா பலசாலிகளே யாவார்கள்!

ஃ

தேம் செல்வாக்கை நம்பிய பலசாலிகள் இன்னொரு வகுப்பார்! கடவுளை நம்பிய பலசாலிகள் வேறொரு வகுப்பார்! கோயிலில் ஸ்வாமிதரிசனத்திற்கு வருவோரை ஆண் பெண் என்று பாராமலே பிடித்துத் தள்ளும் கோயிலின் பரிசாரகர்களும் அந்த சமயத்திற்கு அந்த இடத்தில் பெரிய பலசாலிகளே! அவர்கள் கோயிலை விட்டு 'வெளியில் வந்து அவ்விதம் செய்தாலோ எல்லோரும் கூடிப் பழுக்கத்தீர்ந்து விடுவார்களென்பதும் அவர்களுக்கு அந்தரங்கத்தில் தெரிந்த சங்கதிதான்! தாங்கள் எவ்வளவு அக்கிரம சேஷ்டைகள் புரியினும் தங்களை எதிர்க்க வல்லவன் யாரென்கிற மடாதிபதிகளும் ஒருவித பலசாலிகளே யல்லவா! ஓ! ஜெயித்துத் தருவேன் என்று ஆதரித்து உற்சாகப்படுத்தும் வக்கீல்களும் மிகு பலசாலிகளே! பிணி தீர்ப்பேன் என்று தேற்றும் வைத்தியர்களின் பலத்தை நம்பாதவர்களுண்டா? பத்திரிகைகளின் பணத்தை விழுங்கி ஏப்பமிடும் ஏஜண்டுகளும், சந்தாதார்களும் பெரிய பலசாலிகள் தான்!

ஃ

---

ஒருவர் ஒரு சங்கதியைப்பற்றிப் பேசுகையில் அது அருகிலிருப்பவருக்குக் கேட்கப் பிடிக்காதிருந்தால், உடனே அந்தப் பேச்சை விட்டு விட்டு வேறொரு சங்கதியில் தொடங்கிக் கொள்வதே சமாதான மார்க்கம்.

நொந்தவனையே பின்னும் நோக வைக்கும் பலசாலிகள், வண்டிகளை வெகு வேகத்தில் விட்டு சமாளிக்கும் பலசாலிகள், யார் செத்தாலும்—இருந்தாலும் சரி—என்று துணிந்து தூர தேசம் சென்றிடும் பலசாலிகள், விடா முயற்சியில் பலசாலிகள், வீடுகட்டி முடித்து சமாளிக்கும் பலசாலிகள், எவ்வளவு பெரிய வர்த்தகங்களையும் வேறு பலவற்றையும் நிர்வகிக்கும் பலசாலிகள், தங்கட்கு வேலை தெரியாவிடினும் அதை மறைத்து யாவும் தலைக்குமேல் தெரிந்ததுபோல் நடித்து, சிப்பந்திகளிடம் வேலை வாங்கி, அதின் மூலமாக எல்லா விவரமும் தெரிந்து கொண்டு தங்களின் மானேஜர் பதவிகளைக் காத்துக் கொள்ளும் பலசாலிகள், உள்ள உண்மையை சட்டத்திற் கடங்கிய வார்த்தைகளில் வெளியிட்டுப் பத்திரிக்கையைக் காத்துச் செல்லும் தினசரி ஆசிரியபலசாலிகள், எல்லாம் அறிந்தும் அறியாத தன்மையில் அடக்கங் காட்டும் பலசாலிகள், சினத்தை வெல்வோரும்—மனத்தை யடக்குவோரும்.—பொறுமையைக் கைப்பற்றுவோருமான பலசாலிகள், வேலை முடியும்வரை ஓரேபிடிவாத நோக்காடாய் இருக்கும் பலசாலிகள், லோகோபகாரமான கருவிகளைக் கண்டுபிடிக்கும் பேர்போன பலசாலிகள், இல்லறத்திலிருந்தும் துறவறநிலையில் திடமனதுடனிருக்கும் பலசாலிகள், இரு பெண்டாட்டிகளுடன் போராடும் பலசாலிகள், மனைவி—தாய் இருவரிடையும் தோன்றும் சண்டையின் நடுவேநின்று சமாளிக்கும் பலசாலிகள் ஒரு விவகாரத்தை சமரஸப்படுத்தி ஒன்று சேர்த்திடும் பலசாலிகள், ஆபத்தில் கைகொடுத்துத் துணை நிற்கும் உண்மையான நெஞ்சுள்ள பலசாலிகள், பிதிரார்ஜிதசொத்துக்குப் பழுதின்றிக் காத்து உழைத்துண்ணும் பலசாலிகள், முதலில் இருந்தபடியே கடைசியிலும் கௌரவ செல்வாக்குடனிருந்து மரிக்கும் நிர்வாக பலசாலிகள், தன் வரவை வெளியிடாது மானங்காத்துக் கௌரவமாய் வாழும் பலசாலிகள், சண்டை சச்சரவைக் கவனியாமல் காரியத்தில் கண்ணாயிருந்து முடித்துக்கொள்ளும் பலசாலிகள்—இன்னும் எவ்வளவோ பலசாலிகளை விகடன் ஓயாமல் சொல்லிக்கொண்டு போகலாம். இந்தப் பலசாலிகளிலே நியாயவான்களுமிருக்கிறார்கள், அக்கிரமஸ்தர்களுமிருக்கிறார்கள்! நியாயவான்களுக்கு விகடன் தலைவணங்கிக் கும்பிடுபோடுகிறேன். அக்கிரமஸ்தர்களுக்கோ என் கோணைத்தடியைத் தூக்கித் தூக்கிக் காட்டி எச்சரிக்கிறேன்! இவ்வளவு பலங்களுக்கும் மேலாக—அத்தனை பலங்களையும் அனுபவித்து இன்புறுதற்குப் பிரதானமாய் வேண்டியுள்ள தேகபலமே முக்கியமானதென்று இன்னொரு தடவையும் கடைசியாகச் சொல்லி விடுகிறேன்! பிறகு உங்கள் பாடு! ராம்! ராம்! சுபம்! ஓ!! சுவாஹா!!!

---

பெண்களின் படிப்பெல்லாம் தாய் வீட்டிலிருக்கும் வரையுமே விருத்தியாகும். அதன்பின் அப்பெண்ணுக்கு வருகிற புருஷன் மூர்க்கனாய் இருந்து புஸ்தகத்தைப் பிடுங்கி அடுப்பிற்குள் போடுபவனாக மாறினால் பெண் கல்வியின் அபிவிருத்தி எவ்வாறு முடியும்?

---

நொந்துபோன நெஞ்சுக்கு அவன்பட்ட அனுபவங்களை எழுதிப் படிப்பது ஒரு ஆறுதலாக இருக்கலாம். அப்படி எழுத சக்தியற்றவர்கள் பிறரிடம் சொல்லி ஆறுதல் அடைகிறார்கள்.



தன் வீட்டுக்கு வருகிற உபாத்தியாயரென்று இளப்பமாய்த் தோன்றினாலும், மற்ற உபாத்தியாயர்களிடம் கைகட்டி வணங்கவே நேருமாம்!

❀

கோயிலுக்குள் திரை மறைவில் இருக்கிற தெய்வம் தன் எதிரில் வந்து விட்டால்—இவ்வளவு தானா என்கிற அலக்ஷியமாய்ப் போய்விடுமாம்!

❀

ஜாக்கிரதையும், முன்னெச்சரிக்கையும் அதிகமாகிற இடத்திலே அன்பு தங்காதாம்!

❀

தன் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டு, ஒவ்வொன்றையும் ஆராய்கிறவன் பிறகு தனக்கே ஒரு பெரிய கொள்ளியாவானாம்!

❀

தபால் கார்டின் விலை முக்காலணாவாக ஏறியும் வீண் கடிதங்கள் குறைய வில்லையாம்!

❀

மோசக்காரனாய் விட்டவன்தான் அதிக சத்தியவந்தனாய்க் காட்டுவானாம்!

❀

தன் குடி முழுகிப் போகுங்காலத்தில் தான் ஊராரை வஞ்சிக்கும் புத்தி அதிகமாகிறதாம்!

❀

ஒருவனின் கைக்குத் தவறிக் கிடைத்த தப்பு நாணயம், மற்றொரு தவறிப் பெறுகிற பாக்கியவானின் கைக்கு வெகு சீக்கிரம் மாறிவிடுமாம்!

❀

திறையூரில் கூடிய தமிழ்ப் புலவர்கள் தமிழை உயர்த்திக்கூறினாலும், அவர்களிற் பாதிபேராவது ஆங்கிலம் தெரியாத தமிழ்ப் பண்டிதர்களைக் கேவலமாகத் தாழ்த்தித்தான் பேசுவார்களாம்!

❀

சென்னை ஹைகோர்ட்டிலே ஒருவர் தன்னை இழவுக்குச் சங்கு ஊதுகிறவரென்றும், தமது மாத வருமானம் ரூபா 15-ஆகலாமென்றும் சொல்லிக்கொள்ள, விகடன் அவரைப் பார்த்து காலரா—அம்மை காலங்களில் இன்னும் அதிக வரும்படி கிடைக்கலாமேயென்று கேட்டானாம்!

❀

பவுண்டன்பேனா, பொடிடப்பி, புஸ்தகம் போன்றவைகளை ஒருவரிடம் அவசரமாய் வாங்கினால் உடனே திருப்பித் தாராமல் மெதுவாய் இருந்தால், சொந்த சொத்தாகிவிடுமாம்!

❀

தானே தின்பதைவிட, தனக்குப் பிறர் தந்து அதைப் புசிப்பதிலுள்ள ருசிதான் அதிகமாம்! அவ்விதம் தருபவர் காணோமாம்!

❀

அழையா வீட்டிலும் நுழைந்து வலிய க்ஷேமம் விசாரிக்கும் வாயுள்ள பிள்ளைதான் நன்றாகப் பிழைக்குமாம்!

❀

சங்கீதக் கச்சேரிகளில் எவ்வளவுக்குத் தலையாட்டம் அதிகரிக்கிறதோ அவ்வளவுக்கு சங்கீதமும் ரோஷம் ஏறி நன்றாயிருக்குமாம்.

❀

இந்தப் புரட்டாசி மாதத்திலே போன வருஷம் மறைந்த பேய்களெல்லாம் தலைவிரித்தாடியவாறு மறுபடி புறப்படுமாம்! அத்துடன் உதை ஓட்டுகிறவர்களும் புறப்படுவார்களாம்!

❀

தீபாவளிக்கு என்ன புடவை சேலை எடுக்கிறதென்ற பேச்சுகள் இப்போதே தொடங்கி விட்டனவாம்!




## நீந்தக் கற்கும் விதம் எப்படி ?



நான் பட்டணத்திலிருந்து எனது குக்கிராமத்திற்குச் சென்ற போது அங்கு மாடு மேய்த்துக்கொண்டிருந்த ஐந்து வயதுடைய ஒரு பையன் என்னைப் பார்த்து "உங்களுக்கு நீந்தத் தெரியாது போலிருக்கிறதே. நீந்தத் தெரிந்தால் இவ்வழகிய ஆற்றில் அதிக உல்லாசமாய்க் காலம் கடத்தாமல் திரும்பமாட்டீர்களே. ஐயோ! கேவலம்" என்று இடித்துப் பேசியிராவிட்டால் இன்றைக்கும் எனக்கு நீந்துவதில் மனது போகுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா? ஏனெனில், நான் வாசம் செய்யும் பட்டணத்தில் குழாய்த் தண்ணீரிலேயே குளித்து வழக்கப்பட்டவனாகையால் எனக்கு நீந்தும் எண்ணம் உதிக்க நியாயமில்லை. இப்போது அம்மாடு மேய்ப்போன் எனது மனதில் நீந்துவதைப் பற்றி ஒரு புதிய சிந்தனையை எழுப்பிவிட்டானாகையால், எனக்கு அன்று முதல் எவ்வாறேனும் நீந்தக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று அவா பெருகியது.

ஃ

எனது குக்கிராமத்திலேயே நீந்தல் பரீக்ஷைக்குப் பாடம் கற்றுக்கொள்ள நினைத்தேன். அக்கிராமத்தில் நாலாபக்கம் சுற்றினாலும் என் படிப்புக்கேற்ற சிநேகிதர்கள் அகப்படுகிறார்களா? கடைசியில் மாடு மேய்ப்பவர்களில் நல்லவர்களாகிய இருவரைத்தவிர எனக்கு வேறு நண்பர்களே கிடைக்கவில்லை. அவ்விரு சிநேகிதர்களிடமும் என் விருப்பத்தைத் தெரிவித்தேன். அவர்களும் அதற்கு இணங்கித் தங்களின் ஆக்ஞைப்படி நடக்கவேண்டுமென்று வாக்குறுதி வாங்கிக் கொண்டனர். அது என்னவென்றால், நான் அவர்களுடன் ஒரு எருமை மாட்டின்மேல்சவாரி செய்து கொண்டே ஆற்றில் இறங்க வேண்டுமென்றும், எருமை மாடு நீந்திச் செல்லுகையில் அதன் வாலைப் பிடித்துக் கொண்டு நானும் நீந்தவேண்டு மென்றும், அப்படி நீந்தினால் விரைவில் நான் நீந்தல் பரீக்ஷைக்குச் செல்ல ரூபாய் கட்டும் ஸ்திதிக்கு வந்து விடுவேனென்றும், பின் மறுநாள் எருமை மாட்டை விட்டுவிட்டுத் தனியே நீந்தினால் பரீக்ஷையில் தேறிய மாதிரியே யாகுமென்றும் சொன்னார்கள்.

ஃ

மாடு மேய்க்கும் பரமகுருக்களின் வாக்கைத் தேவ வாக்காக மதித்து மறுநாள் நான் அவர்களுடன் ஆற்றில் ஒரு எருமை மாட்டின்மேல் சவாரி செய்து கொண்டே இறங்கிவிட்டேன். எருமை மாடும் நீந்த ஆரம்பித்தது. நானும் அதன் வாலைப்பற்

---

நமது சொந்த சங்கதி, அல்லது பார்த்தறிந்த சங்கதி கலவாதது ஒரு அனுபவமாகாது. அந்த அனுபவத்தை உப்பில்லாப் பண்டத்திற்குச் சமமாக ஒப்பிட முடியும்.

றிக்கொண்டேன். நான் எவ்விதமாக அதன் வாலைப் பிடித்தேனோ எனக்கே தெரியவில்லை. ஒரு வேளை வாலை அதன் உடம்பினின்று வந்துவிடுமாறு இழுத்தேனோ என்னமோ! எப்படியோ அதன் வாலை நான் இழுத்தது நிஜம். அது ஒரு உதை பளார் என்று என் கன்னங்களில் விட்டதும் நிஜம். கைகள் இரண்டையும் ஆகாயத்தில் பரப்பிவிட்டேன். நீங்கள் தான் என்ன செய்வீர்கள் அந்தச் சந்தர்ப்பத்தில்? எனக்கு அப்போது தாகம் ஒன்றுமில்லாமலிருந்தாலும் எனக்குத் தெரியாதவாறே என் வாய் மடக், மடக் என்று தண்ணீர் குடித்ததாம்! பக்கத்திலிருந்த என் பரமகுருக்கள் என்னைத் தேட வந்துவிட்டார்களாம்! ஒருவன் என் தலையைப் பற்றி இழுத்தான். தலை அவன் கைக்கு அகப்படமாட்டேனென்கிறதாம்! ஏனெனில், நான் அன்றுதான் திருப்பதி வெங்கடாசலபதிக்குப் பிரார்த்தனைக்கு மொட்டை யடித்திருப்பது போல் வழுக்கை மொட்டை யடித்திருந்தேன். என்னை எப்படியும் வெளியில் இழுத்துப்போட எண்ணியிருந்த என் பரமகுரு என் மூக்கைத் தவிர வேறு எதைத்தான் அந்த சமயத்தில் பிடித்திருக்க முடியும்? எப்படியோ என் மூச்சு திணறும் வரையும் மூக்கை அமுக்கி என்னைக் கரைக்கு இழுத்து வந்து சேர்த்துவிட்டார்கள். பிறகு என் வயிற்றைப் பிடித்து அமுக்கிக்கொண்டு மின்சார விசிறிபோல சுற்றினர். நான் அன்று சாப்பிட்டதையெல்லாம் வாந்தி யெடுக்கும் வரையும் அவர்கள் என்னை விடவேயில்லை. இவ்வளவு அல்லோகல்லப்படுத்திவிட்டு, உருவத்தை நிறுத்துவதைப் போல் நிறுத்தி என்னை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்கள். அன்று பட்ட பாடு போதும்! போதும்!! அவ்வூரிலேயே இருப்பது வெட்கக் கேடென்று ஊர்வந்து சேர்ந்து விட்டேன். இன்னும் பல நாட்களுக்கு அந்த நீந்தல் என்னும் பேச்சையே நான் எதற்கு எடுக்கிறேன்?

ஃ

ஒரு முறை உண்டான அவாவின் எழுச்சி அத்துடன் நம்மைவிட்டு விடுகிறதா? எந்தப் புஸ்தகத்திலாவது நீந்தக் கற்றுக்கொள்வதெப்படி என்று எழுதியிருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே வந்தேன். ஒரு புஸ்தகத்தில் பூசணிக் குடுக்கையை வைத்துக் கற்றுக்கொள்ளலா மென்றிருந்தது. பின் பூசணிக் குடுக்கைக்காகத் தேடி அலைந்தேன். அதிர்ஷ்ட வசமாக எனக்கு இரண்டு பூசணிக் குடுக்கைகள் கிடைத்தன. அவைகளை எடுத்துக் கொண்டு நான் முன் சொன்ன ஆற்றின் ஜனசஞ்சாரமில்லாத ஒரு பாகத்திற்குத் தனியாகப்போய் இரண்டு குடுக்கைகளையும் இரண்டு கைகளில் ஏந்தி தண்ணீரில் படுத்துவிட்டேன். முதலில் நீந்தவே வந்துவிட்டது. பின்னும் நீந்திக்கொண்டே போய் விட்டேன். நானென்னமோ குடுக்கையைத் தண்ணீருக்குள் போடுமுன் ஒட்டைகள் ஏதாவதிருக்கிறதா என்று சோதிக்கத்தான் சோதித்தேன். நான் பூதக்கண்ணாடிகள் போட்டுக் கொண்டிருக்கவேண்டு மென்று சொல்லுகிறீர்கள்? அதில் ஒரு சிறிய ஒட்டை இருந்திருக்கிறதுபோ விருக்கிறது. அதன் வழியாகத் தண்ணீர் உள்ளே செல்ல, குடுக்கையோ தண்ணீர் பரப்பினின்றும் உள்ளே போக, நானும் அதனுடனேயே உள்ளேபோக, என் வாய் மறுமுறை தாகசாந்தி நிவர்த்தி செய்ய, நான் கண்களை மூட—இவ்வளவும் ஒரு நிமிஷத்தில் நடந்தேறிவிட்டது. மறுமுறையும் யாரோ வழியில் போகும் புண்ணியவான் எனக்கு உயிர்ப்பிச்சை தந்து வெளியில் இழுத்துப் போட்டான். இவ்விரண்டு சங்கதிகளேயும் நான் நினைத்துவிட்டால் என் மனம் இன்னும் தந்தி பேசுகிறது.

இன்னும் நீந்தத் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற ஆர்வம் என்னை விடுகிறதா? அது எப்படி விடும்? மீறும், தலேயும் நீந்துவதைப்பற்றிச் சொல்லிக் கொடுக்க ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்திருக்கின்றனவாம். அவைகளிடம் பள்ளிச் சம்பளம் கட்டிப் படிக்கலாம். அது முடிகிறசங்கதியா? நன்ருய் நீந்தத்தெரிந்த ஒரு பள்ளிச் சினேகிதன் ஒருவன் இருக்கிறன். அவனிடத்தில் போனேன். அவன் வீட்டில் இருக்கும் கிணறு தான் நல்ல இடமென்றும், அதில் கற்றுக்கொடுப்பதாயும் சொல்லுகிறன். நீங்கள்தான் சொல்லுங்கள். நீந்தத் தெரியாமல் கிணற்றில் எப்படி இறங்குவது? முதலில் கிணற்றில் குதித்துவிடவேண்டுமாம். பயத்தை முதலில் தாம் அகற்றவேண்டுமாம். "அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமில்லையே" என்ற ஸ்ரீ பாரதியின் பாட்டைச்சொல்லவேண்டுமாம்! பிறகு நீந்தல் தானுகவே வந்துவிடுமாம். நான் இரண்டு தரம் பயமில்லாமல் யத்தனித்ததில் எவ்வளவு தூரம் நான் நீந்தக்கற்றுக் கொண்டேனென்று நினைக்கும்போதே எனக்கு அதிகமாகப் பயம் வந்து கிணற்றில் குதிக்க மனது வரமாட்டேனென்கிறது. நானெப்படி நீந்தக் கற்றுக்கொள்ளப் போகிறேனே அறியேன்!

S. ஸ்ரீரங்க ராஜு,
"ஜெகந்நாத பாக்", சைதாபேட்டை.






# நெறிமுறை பிறழ்ந்த மாந்தர்.

நம்மவ ரெத்தனைபேர் நாட்டுக்குக் கேடிழைப்பார்?
செம்மை நெறிபிசகித் தீங்கோரு நூறிழைப்பார்.

பொய்ச் சீட்டெழுதிப் பொய்ச்சாட்சி சொல்லவஞ்சார்.
கைக்கூலி கொள்வார் கடன்வாங்கி யில்லையென்பார்.

பிறன்மனைக் கைபிடிக்கும் பேதைய ரெத்தனைபேர்?
மறந்து களவுசெய்யும் வஞ்சகர்க ளெத்தனைபேர்?

பரத்தையரைச் சேவைசெய்யும் பண்டித ரெத்தனைபேர்?
தூர்த்தியே கற்பழிக்குந் துட்டர்க ளெத்தனைபேர்?—

பண்டித ரெத்தனைபேர் பக்தர்மா ரெத்தனைபேர்?
மிண்டராய்த் தீம்பிழைத்து மேலுக்குச் சீலஞ்சொல்வார்.

சாஸ்திரிக ளெத்தனைபேர் சம்பன்ன ரெத்தனைபேர்?
பார்த்துச் சமயம் பரதாரம் தோய்ந்திருப்பார்.

ஆசாரி யெத்தனைபேர் ஐயங்கா ரெத்தனைபேர்
வேசிகள் வீட்டினிலே வேலைகள் செய்திருப்பார்!

வெளியில் வரும்போது வீண்விருது கூடவரும்
பளபளவென்று பகல்வேஷந் தாந் தரிப்பார்!

சந்நியாசி யெத்தனைபேர் தாசியோடு ராக்கழிப்பார்!
மின்னிய தாலியில்லா முண்டைகளை மேவிநிற்பார்!

சளுக்குப் பிளுக்குமுள்ள தட்டோட்ட ரெத்தனைபேர்
தளுக்குக் குலுக்கிவரும் 'தட்டுகள்' பின்றொடர்வார்!

தேவடியாள் வாயுறஞ்சிச் சின்ன மழியாமல்
கோவிலிலே பேரங்கட்டுக் கோலவபிஷேகஞ் செய்து

திருநீறு தந்து திருத்துழாய் கைக்கொடுத்தே
அரிய சடகோப மானதலை மேற்பதித்துத்

தீர்த்தமது வார்த்துத் தினமும் புரட்டிழைக்கும்
தூர்த்தர்க ளெத்தனைபேர்—சொல்லக் கணக்குமுண்டோ?

---

☞ இப்பாடல் 56-வருஷங்கட்கு முன்னர் வசித்திருந்த ஒரு வைணவ வித்வான் தாம் இயற்றிய நூலொன்றில் கண்டது.

# எண்ண உணர்ச்சிகள்.



ஒருவன் திடீரென்று மாறிப் புதுத் தோற்றமடைந்து விடுகிறான். பழைய நட்பையாவது எதிர்க்கிறான். அல்லது தான் பகைத்து நின்றோர்க்கு உதவிகள் செய்யவேணும் முன்வந்து விடுகிறான். ஒரு செயலுமற்றுச் சோம்பிக்கிடந்தவன் அதிசயப்படும்படியான சுறுசுறுப்புள்ளவனாய் மாறி விடுகிறான். தன் கடன் பாக்கியைத் தாராதிருந்தவன் அதையும் கொடுத்து, மேலும் உதவிகள் செய்யவும் தொடங்குகிறான். எவர்கள்மீது அலக்ஷியமாயிருந்தானோ அவர்களை மதிக்க ஆரம்பிக்கிறான். இவ்விதமே சிறு பெண்ணாக நம்முடன் பேசிக்கொண்டிருந்தவள் பருவமடைந்ததும் நாணிக்கோணி மறைகிறாள். புது நடையாய்த் தென்படுகிறாள். ஒருவரைக் கண்டதும் முகம் சிறுத்துப் போகிறது. இன்னொருவரைக் கண்டதும் வதனம் மலர்கின்றது; பரவசப்பட்டு விடுகின்றது. இன்னும் எத்தனையோ விவரிக்கலாம். இவையாவும் அந்தந்த சமயம் உண்டாகிற எண்ண உணர்ச்சிகளின் விளைவாகும். அவ்வப் பருவகாலங்களும் அவற்றின் மாறுதலுக்கேற்ற எண்ண உணர்ச்சிகளை உதிக்க வைக்கின்றன.

ஃ

ஓரிடத்தில் ஒருவன் சில நாட்கள் தங்குகிறான். அவன் அங்கிருப்பதிலே அவ்விட முள்ளார்க்கு அவன் பழக்கம் முதிர்ந்து அவன் நம்மைச் சேர்ந்தவனே யென்கிற ஒற்றுமையான எண்ண உணர்ச்சிகள் வளர்ந்துபோய் அவனுக்கு எல்லா உபசாரங்களும் குறைவின்றிச் செய்கிறார்கள். ஒன்றாக ஒருமித்து ஒரே இடத்திலிருக்கும் காரணத்தால் ஒன்றுபட்ட பாச உணர்ச்சிகளும் கூடிக்கொள்கின்றன. அவனும் அங்கு தன் சொந்த வீடு போல் சுதந்திரமாயிருப்பதற்கு சௌகரியப்பட்டும் போகின்றது. இன்னும் சொந்த வீட்டைவிட அதிக சுகமுள்ளதாகவும் இருக்கிறது. சொந்த வீட்டில் இல்லத்திற்கு வேண்டிய சாமான்கள் காய் கறிகள் எல்லாம் வாங்கிப் போட்டுவிட்டு அந்த நிர்வாகக் கவலைகளோடும் புசிக்கும்படியிருக்கும். இங்கோ அந்தக் கவலைகளே அவனுக்கு இல்லை. அவன்தான் வந்த வேலைகளிலேயே கண்ணும் கருத்துமாய்ப் புசிக்கும் நேரம் வந்தது கூடத் தெரியாமல் செய்துகொண்டேயிருக்கலாம். ‘‘போஜன வேளையாய் விட்டதே, புசிக்க எழுந்திருங்கள்’’ என்று ஒருவர் அவனைத் தட்டி எழுப்பி உண்ணச்செய்ய வேண்டியதாயிருக்கிறது. உண்டுவிட்டு வந்து பிறகும் தன் வேலைகளைச் செய்யத் தொடங்குகிறான். இந்தக் கவலையற்ற சாப்பாட்டுச் சுகம் அவன் சொந்த வீட்டிலில்லை. இவ்வளவு சுகமாக அவன் தான்போன இடத்தில் இருப்பதற்குக் காரணம் அங்குள்ளோரது—அவன் தங்களுக்கு வேண்டியவன்—என்ற எண்ண உணர்ச்சிகளின் பெருக்கேயாகும்.

ஃ

எல்லாம் சரி, இந்த தடவை அவன் சுகமாயிருந்து ஊருக்குப் புறப்பட்டுப்போய், மறுபடியொருதடவை

திரும்பி வருகிறான். தான் முன்பு அவ்வீட்டில் எவ்வளவு பழகியிருந் தாலும், இப்போது புது வீடாகத் தோன்றி, ஒரு மரியாதையுடனே நடந்து கொள்ளவேண்டியிருக்கிறது. வீட்டிலுள்ளோரும் அவனிடத்தில் விஸ்வாசமாயிருந்த முன்னைய எண்ண உணர்ச்சிகளைச் சிறிது சிறிதாகப் புதுப்பித்துக்கொண்டு, சென்ற தடவைபோல் விசுவாசம் காட்டச் சில நிமிஷங்களோ, சில மணிகளோ, சில தினங்களோகூட வேண்டியிருக் கின்றது. அதுவரையில் அவனும் தான் இதற்குமுன் பழகிய வீடாயிருப் பினும் ஒரு புது வீட்டிற்கே தான் வந் திருப்பது போலவே நடந்து கொள்ள வேண்டியவனாகிறான். பிறகு பழகப் பழக—எண்ண உணர்ச்சிகள் விருத்தி பெற்று வளர வளர—முன்னைப்போல் அந்த இடமும் பழய இடம்போலாகி மனதுக்குச் சரிப்பட்டுப் போகின்றது.

ஃ

இவ்விதமே பக்தி சம்பந்தமான எண்ண உணர்ச்சிகள் தோன்றும் போது சிறந்த பக்திமானாகிறான். காமம், காதல் சம்பந்தித்த எண்ண உணர்ச்சிகள் எழுகையில் அவற்றிற் கேற்ற கிரியைகள் தோன்றிக்கொள் கின்றன. ஜீவகாருண்யமான எண்ண உணர்ச்சிகள் பொருந்துங்காலையில் மிகுந்த இரக்க உணர்ச்சி உதயமாகின் றது. எவ்வாறேனும் தன் குடும் பத்தை உயர்விக்கவேண்டுமென்ற எண்ண உணர்ச்சிகள் எழும்போது தூரதேசமாவது போய்ப் பொருள் தேடி வருவோம் என்று புறப்படத் தூண்டுகிறது.

ஃ

ஒருவன் ஒரு நூல் எழுத நினைக் கிறான். அது அவன் கொண்ட எண்ணம். ஆனால், எழுதுதற்கான விஷயங்கள் அவனுக்கு ஒன்று கூடிக் கொண்டு வருவதில்லை. பலமுறை எழுதிப்பார்த்தும் அது திருப்தியில் லாததால் சோர்ந்து போகிறான். பிறகு காலம் கூடிக்கொண்டதும் அத ற்கான எண்ண உணர்ச்சிகள் திரண்டு ஓர் உருவாக அமையும்போது அவனு க்கு நூல் வரைதற்கும் வேண்டிய சரக் குகள் கிடைத்து நூலும் முற்றுப் பெறுகின்றது.

ஃ

ஒரு சம்பவத்தைச் சாதாரண மாகப் பார்க்கும்போது மற்றவர்க்குப் புலப்படாத ஒரு விசேஷித்த எண்ண உணர்ச்சி இவனது மூளையிலே தாக்கு கின்றது. இவனே தன்னிடத்துத் தோன்றிய எண்ண உணர்ச்சியை ஆச்சரியத்துடனும் மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்க்கிறான். அதிலிருந்து உலக வியாப்தமானதும் லோகோப காரமானதுமான அற்புத விஷயங் களைக் கண்டுபிடிக்கிறான்.

ஃ

எவ்வளவோ பெரிய காரியங்களை நடத்தித் தீர்களானோ ரெல்லாம் எதிர் பாராமலே தம்முன் சட்டென்று எழுந்த எண்ண உணர்ச்சிகளின் பய னாகவே முன்னுக்குவந்தோர்களாவார். சிலருக்குப் பூர்வஞான பக்குவம் பொருந்திக்கொண்டு திடீரென்று ஞானபரமான உணர்ச்சிகள் தோன்றி விடுவதனால், அந்த நிமிஷமே உலக சுகத்தை வெறுத்துத் துறவிகளாகப்

---

ஒருவன் நினையாத நேரத்தில் ஒரு விஷயம் ஆரம்பிக்கப்போக, அதற்கு வேண்டிய சரக்குகள் அகப்படாமல் தவிக்கையில், கடவுள் இன்னொருவரை அனுப்பி சகாயம் செய்து அதைப் பூர்த்திபடுத்துகிறார். அந்த மனுஷ்யரைக் கடவுள் அனுப்பிய தூதராகச் சொல்லலாம்.

போயிருக்கிறார்கள். ஒருவன் வியாபாரத்தைத் தொடங்கவேண்டும், இன்னின்னதை ஆரம்பிக்கவேண்டும் என்று துணிந்ததெல்லாம் அவனது எண்ண உணர்ச்சிகளுடைய தூண்டுதலின் பலனேயாம், இனி தனக்கு மீட்சியில்லை என்ற எண்ண உணர்ச்சிகளுக்கு ஆளாகினவன் தற்கொலையே சரியென்ற முடிவுக்கு வருகிறான்.

ஃ

எனவே, இவ்வுலகினில் எண்ணம் இல்லாதவன் மனிதனே யல்ல அவன் மரக்கட்டையே யாவான். 'எண்ண உணர்ச்சிகள்' என்பவை நம்மில் நாமே தோற்றுவித்துக் கொள்வனவன்று; அந்தந்தக் காலத்தின் பொருத்தத்திற்கேற்பத் தற்செயலாகத் தோன்றுபவைகளாகும். சிற்சில கடவுளின் அருளால் உதிப்பனவுமாகும். பல பல—ஓயாது சிந்தித்தலால் எழுபவைகளாகும். எண்ண உணர்ச்சிகளில் நல்லதுமுண்டு, கெட்டதுமுண்டு. நாம் நல்லவற்றையே நாடக்கடவோம்.

---

## பழகிய இடத்து ஆசையின் வெறி.

ஏதோ பழய ஆசையின் தூண்டுதலைச் சாந்திப்படுத்துதற்காக அங்கு செல்வதன்றி, மற்றபடி தன்னை முன்போல் ஆர்வத்தோடும் வரவேற்பரென்றெண்ணியன்று. வலியப்புகுந்த அந்த இடத்தில் காண்பதென்ன? வாவென்பாருமில்லை; இருப்பினும் முகமலர்ச்சி தெரிவிப்பதில்லை. நம்பாட்டில் நாம் தனித்து உட்கார்ந்திருக்க, அவர்கள் வரையில் அவர்களின் வேலையைச் செய்துகொண்டுகிடக்க, போதாக்குறைக்குப் பழயநாளின் வம்புவொன்றை இழுத்துக் காரமாகப் பேசுவதற்காக, நாமும் தணிந்த நிலையில் பதில் சொல்வதாக, இவ்விதமான முடிவில் நாமும் புண் மனத்துடனே விடைபெற்றுத் திரும்புகிறோம். ஏன் அங்கு சென்றோமென்று நமது நெஞ்சு நம்மைக் குத்தித் துளைக்கின்றது. முன்பு நமது பிரிவுக்காகக் கண்ணீர் சிந்தி வருந்தியவர்கள், இப்போது—"இவன் எங்கேயடா வந்தான்—எப்போதடா தொலைவான்" என்று சிடு சிடுத்து மனது மாறிப் போவது ஆச்சரியமன்றோ?

எவரும் எளிதில் நீதிகளைப் போதித்து விடலாம். தான் அந்த நீதிகளின்படி நடவாமலும் இருக்கலாம். ஆனால், தான் பிறர்க்கு உணர்த்தும் அனுபவ போதனைகளோ ஸ்வயமாகவே கண்டும் கேட்டுப் பட்டுமிருப்பதாகவே தான் இருக்கும்.




உபாத்தியாயர்:—என்னடா! இவ்வளவு நேரம் கழித்துவந்தாய்?

மாணவன்:—உங்கள் வீட்டில் அம்மாவுக்கு (உபாத்தியாயரின் மனைவிக்கு) காய்ச்சல் வந்துவிட்டது. தலை பிசைந்துகொண்டிருந்தேன். போதும், பள்ளிக்கூடம் போ என்றதும் இங்கு வந்துவிட்டேன்.

உபாத்தியாயர்:— அப்படியா சங்கதி! உபாத்தியாயரின் வீட்டின் மீது விசுவாசமாயிருப்பவனுக்குப் படிப்பு தானுகவே வளரும், போய் உட்கார்.

ஃ

கடன் தந்தவன்:—என்ன ஓய்! நீர் பெரும் பொய்யராய் இருக்கிறீர். இரண்டு வருஷங்களாகப் பணத்தைத் தராமல் ஏமாற்றி வருகிறீர்?

கடன் பட்டவன்:—ஓய்! நீர் நடுவழிக்கொள்ளைக்காரன்! ஊர் தாலியையெல்லாம் அறுத்துக்கொண்டு போகப்பட்டவன்; போம் போம்.

கடன் தந்தவன்:—உள்ளபடி கொள்ளைக்காரன் நீ தான்! எத்தனையோ ஊர் தாலியையறுத்து ஏமாற்றப் பார்த்த உன் சங்கதியை என் மேலேயே போடுகிருயா?

ஃ

அவன்:—என் மோதிரத்திலிருக்கிற வைரம் நல்லதுதானு?

இவன்:—அதைப் போக்கடித்துவிட்டு, கண்டெடுத்து வருவோனுக்குத் தக்க பரிசு தருவதாய் விளம்பரம் செய். அது உன்னிடம் மறுபடி வராவிடில் நல்ல வைரம்தான்.

ஃ

குழந்தை:— நான் பெரியவனுன பிறகு என் இஷ்டப்படி நினைப்பதையெல்லாம் செய்யலாமல்லவா?

தந்தை:—இல்லை, மகனே! நீ கல்யாணம் செய்துகொண்டு விட்டால் ஒன்றுமே முடியாது. அது ஒரு பெரிய கால்கட்டு.

ஃ

சிறுமி:—அப்பா! உன் பல்லுகளெல்லாம் விழுந்து போச்சே.

பிதா:—உனக்கும் இரண்டு பல்லு போய் விட்டதே.

சிறுமி:—எனக்கு மறுபடியும் முளைக்கும். உனக்கு முளைக்காதப்பா.

ஃ

தமிழ்ப்பண்டிதர்:—தங்களை 20—வருஷங்களுக்கு முன்பு பார்த்துப் பேசியிருக்கிறேன். என் பேர் முத்தமிழ் திலகம் சொக்கலிங்கம். என்னைத் தெரிகிறதா?

ஆங்கில மேதாவி:—ஓ! கொஞ்சம் ஞாபகம் வருகிறது. சந்தோஷம் சரி போய்வாரும். போம், போங்கள்.

தமிழ்ப்பண்டிதர்:—போம் போம் என்கிறீர்களே தவிர அன்போடும் அழைத்துப் பேசக் காணேமே. கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்பதைத் தங்களிடத்தில் தெரிந்து கொள்ள முடியவில்லையே, இவன் நமக்கு சமமான புகழுள்ளவனல்லவென்று தங்கள் எண்ணமா?

—

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ வருஷத்திய புரட்டாசிமாத பஞ்சாங்கம்.

| யோகம் | தேதி | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | [அசூன்யசயன விரதம் |
| கி-அ | 16 | 1 | வெள் | துவி-59-28, உட்-17-29, விருத்தியர்க்கம்,ஷடசீதி, |
| பி-சி | 17 | 2 | சனி | திரி-60-0, ரே-23-44, பிரஹதி கௌரீவிரதம், |
| | | | | திருதினஸ் பிருக் |
| சி-பி | 18 | 3 | ஞா | திரி-4-53, அசு-30-42 |
| சி-ம | 19 | 4 | திங் | சது-10-53, பர-38-7, |
| | | | | மஹாபரணி |
| சி-அ | 20 | 5 | செவ் | பஞ்-17-5, கிரு-45-34, |
| | | | | கிருத்திகா விரதம். |
| சி | 21 | 6 | புதன் | ஷஷ்-23-2, ரோ-52-36. |
| ம | 22 | 7 | வியா | ஸப்-28-16, மிரு-58-46. |
| சி | 23 | 8 | வெள் | அஷ்-32-18, ஆரு-60-0, |
| | | | | துலாயனம் 14-42 |
| சி | 24 | 9 | சனி | நவ-34-47, ஆரு-3-34, அவிதமநவமி. |
| சி | 25 | 10 | ஞா | தச-35-24, புந-6-40. |
| சி | 26 | 11 | திங் | ஏகா-34-5,பூச-7-54.ஸர்வைகாதசி. |
| சி | 27 | 12 | செவ் | துவா-30-54, ஆயி-7-17, பிரதோஷம். [யுகாதி. |
| சி-அ | 28 | 13 | புதன் | திர-26-2, மக-4-54, சிவராத்திரி, கஜச்சாயா, கலி |
| சி-ம | 29 | 14 | வியா | சது-19-44, பூர-0-58, உப-54-48, திதிதுவயம், |
| சி | | | | மஹாலய அமாவாசை. |
| அ-சி | 30 | 15 | வெள் | ●-12-19, ஹஸ்-49-36, அர்த்தநாரீசுவர தரிசனம். |
| ம-அ | 1 | 16 | சனி | பிர-4-9, உப-51-25, சித்-43-5, ஆசுவீஜசுத்தம், நவ |
| | | | | ராத்திரி ஆரம்பம், கரிநாள் அவமா. |
| சி-உ | 2 | 17 | ஞா | திரி-47-9, ஸ்வா-36-35, ஜமாதிஸானிமீ 1உ |
| ம-சி | 3 | 18 | திங் | சது-39-7, விசா-30-24, திருப்பதி கருடன். |
| சி-உ | 4 | 19 | செவ் | பஞ்-31-57, அநு-24-57, உபாங்கலலிதா விரதம். |
| சி-ம | 5 | 20 | புதன் | ஷஷ்-25-48, கேட்-20-33, ஷஷ்டிவிரதம். |
| சி | 6 | 21 | வியா | ஸப்-20-57, மூல-17-24, திதிதுவயம் ஸரஸ்வதி |
| | | | | ஆவாஹனம், மஹிடாசுரஸம்ஹாரம். |
| பி-சி | 7 | 22 | வெள் | அஷ்-17-32, பூரா-15-43, திருச்செங்கோடு பார் |
| | | | | வதிதேவியார் இடப்பாகதவசிலே. |
| சி | 8 | 23 | சனி | நவ-15-42, உரா-15-33, மஹாநவமி, விஜயதசமி. |
| அ-ம | 9 | 24 | ஞா | தச-15-24, ஶ்ரவ-16-51, ஸ்ரீவில்லிபுத்தூர் தேர்- |
| சி | 10 | 25 | திங் | ஏகா-16-31, அவி-19-33, ஸர்வைகாதசி, கோதுவா |
| ம | 11 | 26 | செவ் | துவா-18-54, சத-23-13, பிரதோஷம். [தசி. |
| அ-சி | 12 | 27 | புதன் | திர-22-23, பூட்-28-25, அதிதி. |
| சி | 13 | 28 | வியா | சது-26-47, உட்-34-13. |
| அ | 14 | 29 | வெள் | ○-31-54, ரே-40-41, கௌமுதீவிரதம், கரிநாள். |
| சி | 15 | 30 | சனி | பிர-37-34, அசு-47-43, ஆசுவீஜபகுளம். |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ரா | 15உக்கு ராசி | | குஜ |
| சனி | | | சு-கு கேது |
| | | | புத ரவி |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.